வியாழன் தோறும்　CANADA EELAMURASU

# ஈழமுரசு

முரசு: 20　டிசம்பர் 27, 2018 - ஜனவரி 03 , 2019　இதழ்: 152




# இனவழிப்பு ஒப்பந்தம் 70 ஆண்டுகளின்பின்...




## தமிழர் இனவழிப்புக்கு நடவடிக்கை கோரிய கருத்தரங்கம்

# தமிழர்களை ஐக்கியப்படுத்திய வன்னி வெள்ளம்



# ஈழமுரசு

## அனர்த்தத்திலும் ஒரு நம்பிக்கை...

தாயகத்தில் கொட்டித் தீர்த்த கன மழையால் 80 ஆயிரத்துக்கும் அதிகமானவர்கள் அகதிகளாகியுள்ளனர். இடம்பெயர்ந்து முகாம்களில் தஞ்சமடைந்திருக்கின்றார்கள். பெரும்பாலானவர்கள் தமது வாழ்வாதாரத்துக்குரிய பயிர்கள், கால்நடைகளை இழந்து விட்டார்கள். பட்டகாலிலே படும் என்பதைப்போல மீண்டும் வன்னிப் பிரதேச மக்களே அழிவுகளைச் சந்தித்திருக்கின்றார்கள்.

உள்நாட்டிலிருந்தும், புலம்பெயர்ந்த உறவுகளிமிருந்தும் உடனடியாக விரைந்து கிடைத்த உதவிகளால் இடம்பெயர்ந்த போதிலும் பாரிய நெருக்கடிகள் தவிர்க்கப்பட்டுள்ளன.

வடக்கில் இடம்பெற்றது ஒரு இயற்கை அனர்த்தம் எனச் சொல்லிக்கொண்டாலும் கூட, இதற்கு இயற்கையை மட்டும் குறைகூறிவிட முடியாது. வன்னிப் பகுதியில் இதுபோன்ற வெள்ளப் பெருக்குகள் ஏற்படுவது இப்போது வருடாந்த நிகழ்வாகிவிட்டது. ஒவ்வொரு வருடமும் இவ்வாறான நிலைமைகள் ஏற்படுகின்ற போதிலும், அதனைத் தடுப்பதற்கான ஆக்கபூர்வமான செயற்பாடுகள் எதுவும் முன்னெடுக்கப்படுவதில்லை.

வருடாந்தம் வெள்ளப்பெருக்கு ஏற்படும் போது தற்காலிக முகாம்களை அமைத்து இடம்பெயரும் மக்களை அங்கு தங்கவைப்பதுடன் தமது பணி முடிந்துவிட்டதாகக் கருதும் அதிகாரிகளைத்தான் நாம் காண முடிகின்றது. வன்னி என்பது குளங்கள் நிறைந்த ஒரு பிரதேசம். ஆனால், ஒரு முரண்பாடாக ஒரு வரண்ட பிரதேசமாகவும் அது அறியப்படுகின்றது. இது ஒரு முரண்நகை.

முறையான நீர்ப்பாசனத் திட்டங்கள் இருக்குமாயின் வன்னியில் வரட்சியையும், தவிர்க்க முடியும், வெள்ளப்பெருக்கையும் தவிர்க்க முடியும். அதற்காகத்தான் நம்முன்னோர்கள் வன்னிப் பெருநிலப்பரப்பில் பெருமளவு குளங்களை அமைத்திருந்தார்கள். அவை முறையாகப் பயன்படுத்தப்படுவதும் இல்லை, அதற்கான ஆக்கபூர்வமான திட்டங்கள் செயற்படுத்தப்படவும் இல்லை.

வடக்கின் மிகப்பெரிய குளமான இரணைமடுவிலிருந்து வெளியேறிய நீரே கிளிநொச்சிப் பகுதியை வெள்ளக்காடாக்கியதாக தகவல்கள் வெளிவந்திருக்கின்றன. இரணைமடுவில் தேங்கும் மேலதிக நீரை யாழ்ப்பாணத்துக்கு, குறிப்பாக தீவுப் பகுதிகளுக்குக் கொண்டுவருவதற்கான பாரிய திட்டம் ஒன்று தீட்டப்பட்டது. சுயநல அரசியல்வாதிகளின் செயற்பாடுகளால் அது பின்னர் தடுக்கப்பட்டது.

யாழ்ப்பாணத்துக்கு அனுப்பப்பட்டிருக்கவேண்டிய நீர் இப்போது கிளிநொச்சியை வெள்ளக் காடாக்கியதுடன், யாருக்கும் பயனின்றி கடலுடன் கலக்கவிடப்பட்டதாகவும் செய்திகள் வெளிவந்தது. ஆக, முறையான திட்டமிடல் இருந்திருந்தால் இந்த அனர்த்தங்கள் தவிர்க்கப்பட்டிருக்கலாம் என்பதுடன், வீணாக கடலுக்குள் கலந்த நீரை வன்னியை வளமாக்கப் பயன்படுத்தியும் இருக்க முடியும்.

இப்போது கற்றுக்கொண்ட பாடங்களின் அடிப்படையில் முறையான திட்டமிடலுடன் கூடிய செயற்பாடுகளே அடுத்த கட்டமாகத் தேவையாகவுள்ளது. சுயநல அரசியல்வாதிகளை ஒதுக்கிவிட்டு இதற்கான செயற்திட்டங்களை வரைவது அவசரமும், அவசியமுமாகும்.

இந்த இடத்தில் இன்னும் இரு விடயங்களையிட்டும் குறிப்பிடவேண்டும்.

ஒன்று - வன்னியில் இயற்கை அனர்த்தம் என்றவுடன் அவசரமாக உதவிகளை அனுப்பிய புலம்பெயர்ந்த உறவுகள். அவர்கள் தாயகத்திலுள்ள மக்களுக்கு நம்பிக்கையைக் கொடுத்திருக்கின்றார்கள். அரச இயந்திரம் மெல்ல மெல்ல நகர்வதற்கு முன்னதாகவே புலம்பெயர்ந்த உறவுகளின் உதவிகள் வன்னியைச் சென்றடைந்தன.

புலம்பெயர்ந்திருந்தாலும் தமது ஆத்மா தாயகத்தில்தான் இருக்கின்றது என்பதை மீண்டும் ஒரு தடவை வெளிப்படுத்திய சந்தர்ப்பம் இது.

இரண்டு - வடக்கில் உள்ள இளைஞர்கள், பல்கலைக்கழக மாணவர்கள் போர்க் காலத்தில் செயற்படுவதைப்போல வேகமாகவும், விவேகமாகவும் செயற்பட்டார்கள். உதவிக்கும் மீட்புப் பணிக்கும் அரசாங்கம் வரட்டும் என அவர்கள் காத்துக்கொண்டிருக்கவில்லை. உடனடியாகவே களத்தில் இறங்கினார்கள். பாதிக்கப்பட்ட மக்களை மீட்பதிலும், அவர்களுக்கு அவசரமாகத் தேவையாக இருந்த நிவாரணங்களைக் கொண்டு சென்று சேர்ப்பிப்பதிலும் அவர்கள் செயற்பட்ட விதம் தமிழினத்துக்கே நம்பிக்கையைக் கொடுக்கக்கூடியது.

எந்தவித தலைவரோ அல்லது அமைப்போ அல்லது வழிகாட்டலோ இல்லாமல் தமிழ் இனம் எப்படி ஒருவருக்குகொருவர் இப்படி உதவுகின்றனர் என்பது ஆச்சரியமாக இருக்கலாம். எந்த அமைப்புகளையும் அரசியலையும் அரசையும் சாராமல் பல இளையோர் குழுக்குழுவாய் இணைந்து மக்களுக்கு சேவை புரிகிறார்கள். தாமாக முன்வந்து யார்யாரோ என்றறியாத உறவுகளுக்குத் துணையாய் இருப்பது எல்லோராலும் முடியாது. அதனை எமது இனம் செய்துகொண்டிருக்கிறது.

வெள்ள அனர்த்தத்திலும் ஒரு நம்பிக்கை ஒளிக்கீற்றாக இருப்பது இதுதான்.

### தேசியத் தலைவரின் சிந்தனையிலிருந்து



நிலத்தில் புதையுண்டிருக்கும் ஆயிரமாயிரம் சமாதிக் கற்களும் விடுதலையையே குறியீடு செய்து நிற்கின்றன. வீதிகளில், சந்துகளில், சுவர்களில் நாம் சந்திக்கும் மாவீரர்களது திருவுருவங்களும் விடுதலையின் சாட்சியங்களாகவே எமக்கு காட்சி தருகின்றன.

### மாவீரர்களின் பெற்றோர், உறவினர்களுக்கு மாவீரர்களின் நினைவை ஈழமுரசில் பதிவு செய்ய எமக்கு அனுப்பி வைக்கவும்



எங்களுக்காய் தங்கள் வாழ்வை தியாகம் செய்த எம் தெய்வங்களை தினமும் நினைவு கூருவோமாக.




எம்முடனான தொடர்புகளுக்கு:
647-808-7766
647-408-8049



email: eelamurasu@yahoo.com
https://www.facebook.com/Eelamurasu-1400177629995000/

# கூட்டமைப்பின் 3 எம்.பிக்களுக்கு இரட்டைக் குடியுரிமை உண்டாம்

## போதிய ஆதாரங்கள் கைவசம் இருக்கின்றமையால் விரைவில் சட்ட நடவடிக்கை என்கிறது மஹிந்த அணி

இரட்டைக் குடியுரிமையைக் கொண்டுள்ள தமிழ் தேசியக் கூட்டமைப்பின் மூன்று நாடாளுமன்ற உறுப்பினர்களை, தகுதியிழப்புச் செய்யக் கோரி, சட்டநடவடிக்கை எடுக்கவுள்ளதாக மஹிந்த ராஜபக்ஷவின் சிறிலங்கா பொதுஜன முன்னணி எச்சரித்துள்ளது.

சிறிலங்கா பொதுஜன முன்னணியின் நாடாளுமன்ற உறுப்பினர் றோகித அபேகுணவர்த்தன கொழும்பில் நேற்று முந்தினம் நடத்திய செய்தியாளர் சந்திப்பில் இது குறித்த அறிவிப்பை வெளியிட்டார்.



இரட்டைக் குடியுரிமையைக் கொண்டுள்ள தமிழ்சியக் கூட்டமைப்பின் மூன்று நாடாளுமன்ற உறுப்பினர்கள் பற்றிய தேவையான தகவல்களைப் பெற்றுக்கொள்ள முடிந்துள்ளது. ஆனால் அதனை இரகசியமாக வைத்திருக்கிறோம். புத்தாண்டில் அவர்களுக்கு எதிராக நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்படும்.

2015 ஓகஸ்ட் மாதம் நாடாளுமன்றத் தேர்தலில் தெரிவு செய்யப்பட்ட போது, கூட்டமைப்பின் மூன்று நாடாளுமன்ற உறுப்பினர்களும் இரட்டைக் குடியுரிமையைக் கொண்டிருந்தனர் என்பதை நிஷரூபிக்க போதிய ஆதாரங்கள் எம்மிடம் உள்ளன. ஆனால் அவர்களின் பெயர்களை இப்போது ஊடகங்களுக்கு வெளியிட முடியாது. நீதிமன்றத்தில் வழக்குத் தாக்கல் செய்யப்படும் போதே அவர்களின் பெயர்கள் வெளியிடப்படும்.

இரட்டைக் குடியுரிமையைக் கொண்டிருந்தமையால் கீதா குமாரசிங்கவின் நாடாளுமன்ற உறுப்பினர் பதவி பறிக்கப்பட்டது. அதே சட்டத்தைதஇரட்டைக் குடியுரிமை கொண்டுள்ள ஏனைய நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கும் நடைமுறைப்படுத்த வேண்டும். என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

# களம்

# அன்ரன் பாலசிங்கம்

தலைமைச்செயலகம்,
தமிழீழ விடுதலைப் புலிகள்,
தமிழீழம்
2006-12-14

எமது சுதந்திர இயக்கத்தின் அரசியல் இராஜதந்திர நகர்வுகளில் எனக்குப் பக்கபலமாக இருந்து செயற்பட்ட எமது தேசத்தின் ஒளிவிளக்கு இன்று அணைந்துவிட்டது. ஆலோசனை வேண்டி, ஆறுதல் தேடி ஓடுவதற்கு பாலாண்ணை இன்று என்னுடன் இல்லை. இவரது மறைவு எனக்கு மாத்திரமல்ல தமிழீழ தேசத்திற்கே இட்டுநிரப்பமுடியாத பேரிழப்பு.

பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே விரியும் காலமாக மனிதவாழ்வு நிலைக்கிறது. இந்த வாழ்வுக்காலம் எல்லா மனிதர்களுக்கும் ஒரேமாதிரியாக, ஒத்ததாக, ஒருசீராக அமைவதில்லை. காலச்சீரற்றதாக ஒருவருக்குக் கூடி, மற்றவருக்குக் குறுகி, இன்னொருவருக்கு அதிகம் நெடுத்து கூடிக்குறைந்து செல்கிறது. துரதிஸ்டவசமாக, பாலாண்ணையினது வாழ்வு இடைநடுவில் நின்றுபோய்விட்டது. தீவிரம்பெற்றுள்ள எமது விடுதலைப்போருக்கு அவர் நிறையப் பணிகளை ஆற்றவேண்டியிருக்கின்ற தருணத்தில் அவருக்கு மரணம் சம்பவித்திருக்கிறது. இதனை என்னால் ஏற்றுக்கொள்ளமுடியவில்லை. துயரத்தின் சுமை என் ஆன்மாவை அழுத்துகிறது. என் உள்ளத்தை உடைத்து, நெஞ்சத்தைப் பிளக்கிறது. கட்டுக்கடங்காத காட்டாறு போல சீறிப்பாயும் உணர்ச்சிப் பெருவெள்ளத்தை என்னால் வார்த்தைகளால் கொட்டமுடியாது. மனித மொழியில் இதற்கு இடமுமில்லை.




பழக ஆரம்பித்த நாள் முதலே எமக்கிடையே ஒரு இனம்புரியாத புரிந்துணர்வு ஏற்பட்டது. அந்தப் புரிந்துணர்வால் எழும் பற்றுறவால் பிணைந்துகொண்டு, எமது உறவு நல்லுறவாக வளர்ந்து நட்புறவாகப் பரிணமித்தது. சிந்தனையாலும் செயலாலும் ஒன்றுபட்ட மனிதர்களின் சங்கமமாக அந்த உறவு மலர்ந்தது. தினம்தினம் நாம் பகிர்ந்துகொண்ட வாழ்பனுபவத்தில் வலிமைபெற்று வளர்ந்தது. சாதாரண மனித உறவுகளிலிருந்து இது முற்றிலும் வேறுபட்டது. காலத்தால் கனிந்து, வரலாற்றால் வடிவம் பெற்ற ஒரு அலாதியான இலட்சிய உறவு அது.



பாலாண்ணையை நான் ஆழமாக நேசித்தேன். விடுதலை இயக்கம் என்ற மாபெரும் குடும்பத்தில் ஒரு மூத்த தலைமகனாக பிதாமகனாக மூன்று தசாப்தங்கள் வாழ்ந்தவர் அவர். நானும் அவரை அப்படித்தான் நோக்கினேன். ஒரு குடும்பமாக ஒன்றுசேர்ந்து ஒத்திசைவாக ஒன்றித்திருந்த நாட்களில் அவர் ஒரு சாதாரண மனிதப்பிறவி அல்ல என்பதைக் கண்டுகொண்டேன். மோசமாகச் சுகவீனமுற்று தினம்தினம் சாவோடு போராடியபோதும், தாங்கமுடியாத உடல்உபாதைகளால் வருந்தியபோதும், தளர்ந்துபோகாத உறுதிப்பாடு அவரிடம் இருந்தது. அவரின் இந்த இலட்சிய உறுதி எனது நெஞ்சத்தைத் தொட்டுநின்றது. அவர் துன்பத்தால் துவண்டபோதெல்லாம் எனது ஆன்மாவும் கலங்கியழுதது.

எமது இயக்கத்தின் வளர்ச்சியிலும் அதன் இன்றைய விரிவாக்கத்திலும் பாலாண்ணைக்கு ஒரு நிரந்தரமான இடம் இருக்கிறது. ஒரு மூத்த அரசியல் போராளியாக, ஒரு மதியுரைஞராக, ஒரு தத்துவாசிரியராக எல்லாவற்றுக்கும் மேலாக எனது உற்ற நண்பனாக இருந்து எனக்கு ஊக்கமும் உத்வேகமும் அளித்தவர். ஆலோசனையும் ஆறுதலும் தந்தவர். எனது உணர்வுகளைப் பகிர்ந்துகொண்டு, எனது பளுக்களையும் பங்கிட்டுக்கொண்டவர். எமது விடுதலை இயக்கம் தோற்றம்பெற்ற ஆரம்பகாலம் முதல் என்னோடு இருந்து, எல்லாச் சோதனைகளையும் வேதனைகளையும் சவால்களையும் சங்கடங்களையும் தாங்கிக்கொண்டவர். எமது அரசியல் இராஜதந்திர முன்னெடுப்புக்களுக்கு மூலாதாரமாக, முன்னால் நின்று செயற்பட்டவர்.

ஈழத்தமிழினம் பெருமைகொள்ளும் வகையில் அரசியல் உலகிலும் இராஜதந்திர உலகிலும் அளப்பெரும் சாதனைகள் புரிந்து, எமது தேசசுதந்திரப் போராட்டத்தை உலக அரங்கில் முன்னிறுத்திய பாலாண்ணையின் மாபெரும் போராட்டப்பணிக்கு மதிப்பளித்து "தேசத்தின் குரல்" என்ற மாபெரும் கௌரவப்பட்டத்தை அவருக்கு வழங்குவதில் நான் பெருமையடைகிறேன். பாலாண்ணை உண்மையில் எம்மைவிட்டுப் போகவில்லை. அவர் எமது நினைவலைகளில் என்றும் நீங்காத நினைவுகளாக நிலைத்து நிற்பார்.

புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்

**வே.பிரபாகரன்**
**தலைவர்**
**தமிழீழ விடுதலைப் புலிகள்**

# வடக்கில் வெள்ளத்தினால் 74 ஆயிரம் பேர் பாதிப்பு



வடக்கு மாகாணத்தில் கடந்தவாரம் ஏற்பட்ட வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை, 74 ஆயிரமாக அதிகரித்துள்ளதாக இடர்முகாமைத்துவ நிலையம் அறிவித்துள்ளது.

இவர்களில் பெரும்பாலானவர்கள், முல்லைத்தீவு, கிளிநொச்சி, யாழ்ப்பாணம் மாவட்டங்களைச் சேர்ந்தவர்களாவர்.

முல்லைத்தீவு மாவட்டத்தில் 6,520 குடும்பங்களைச் சேர்ந்த, 20,737 பேரும், கிளிநொச்சி மாவட்டத்தில், 12,118 குடும்பங்களைச் சேர்ந்த 39,932 பேரும், யாழ்ப்பாண மாவட்டத்தில், 4257 குடும்பங்களைச் சேர்ந்த, 12,642 பேரும், வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டுள்ளனர்.

வவுனியா மாவட்டத்தில், 455 பேரும், மன்னார் மாவட்டத்தில், 85 பேரும், வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டுள்ளனர் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## மாந்தையில் சீன குழுவினர் அகழ்வாய்வு



மன்னார் மற்றும் மாந்தை துறைமுகங்கள் ஊடாக சிறிலங்காவுடன் சீனர்கள் மேற்கொண்ட பண்டைய வணிகம் தொடர்பாக, சீன மற்றும் சிறிலங்கா தொல்பொருள் ஆய்வாளர்கள் கூட்டு ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர்.

சீனாவின் சிசுவான் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஆய்வுக் குழுவினருடன், களனி பல்கலைக்கழகத்தின் தொல்பொருள் திணைக்களத்தின் குழுவினர் இணைந்து இந்த ஆய்வுகளில் ஈடுபட்டுள்ளனர்.

மாந்தை துறைமுகம் தொடர்பாக, எந்த விரிவான ஆய்வுகளும் மேற்கொள்ளப்படவில்லை என்று, இந்த ஆய்வுக் குழுக்களுக்குத் தலைமை தாங்கும், களனி பல்கலைக்கழக பேராசிரியர் கலாநிதி மங்கள கட்டும்பொல, தெரிவித்துள்ளார்.

சீன தொல்பொருள் ஆய்வாளர்கள் அண்மையில் யாழ்ப்பாணம், அல்லைப்பிட்டியிலும் சீன வணிகத் தொடர்புகள் குறித்த அகழ்வாய்வுகளில் ஈடுபட்டிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

# காணி விடுவிப்பைத் துரிதப்படுத்துவது அரசாங்கத்தின் பொறுப்பாகும்

### மாவை சேனாதிராஜா எம்.பி. வலியுறுத்தல்

வடக்கு, கிழக்கில் படையினர் வசமுள்ள காணிகளில் காணி உறுதிப்பத்திரங்கள் உள்ள தனியார் காணிகளை முதலில் விடுவிப்பதாக இராணுவம் கூறுவதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஜனாதிபதியின் பணிப்புரையின்படி இம்மாத இறுதிக்குள் அனைத்து தனியார் காணிகளும் விடுவிக்கப்பட வேண்டும் என்பதே எமது நிலைப்பாடாகும்.

தனியார் காணிகளை விடுவிக்கும் பட்சத்தில் தமது இராணுவத்தளங்களை அமைத்துக் கொள்வதற்கு வேறு காணிகள் மற்றும் நிதி வழங்கப்பட வேண்டும் என இராணுவத்தினர் கோரிக்கை விடுத்துள்ளனர். அவற்றை கருத்திற்கொண்டு நிறைவேற்றுவதுடன், வடக்கு, கிழக்கில் படையினர் வசமுள்ள தனியார் காணிகள் விடுவிக்கப்படுவதற்கு விரைவான நடவடிக்கைகளை மேற்கொள்வது அரசாங்கத்தின் பொறுப்பாகும் என்று இலங்கை தமிழரசுக் கட்சியின் தலைவர் மாவை சேனாதிராஜா தெரிவித்தார்.

விசாரணைகள் இன்றி சிறைகளில் உள்ள அரசியல் கைதிகளை விடுதலை செய்வது தொடர்பில் ஜனாதிபதியிடம் மீளவும் வலியுறுத்தவுள்ளதாகவும் அவர் சுட்டிக்காட்டினார்.

காணிவிடுவிப்பு, அரசியல் கைதிகள் விவகாரம் தொடர்பில் ஜனாதிபதியின் நிலைப்பாடு மற்றும் தமிழ் தேசியக் கூட்டமைப்பின் பங்களிப்பு தொடர்பில் வினவிய போதே அவர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார். அவர் தொடர்ந்தும் கூறுகையில்,

நாட்டில் அரசியல் சிக்கல் நிலை ஏற்படுவதற்கு முன்னர் அரசியல் கைதிகளின் விடுதலை குறித்து ஜனாதிபதி அவதானம் செலுத்த வேண்டும் என வலியுறுத்திய போது பிரதமர் ரணில் விக்கிரமசிங்க நாட்டில் இருக்கவில்லை. எனவே அவர் நாடு திரும்பியதும் பிரதமருடன் கலந்துரையாடி இவ்விடயம் தொடர்பில் சாதகமான நிரந்தர தீர்வொன்றை வழங்குவதாக ஜனாதிபதி வாக்களித்திருந்தார்.

இந்நிலையில் அரசியல் நெருக்கடிநிலை ஏற்பட்ட பின்னர் தற்போது தான் சிக்கல்நிலைக்கு படிப்படியாக தீர்வுகாணப்பட்டுக் கொண்டிருக்கின்றது. ஆனாலும் இத்தகைய நிலையிலும் ரணில் விக்கிரமசிங்க மீண்டும் பிரதமராகப் பதவியேற்ற பின்னர் தமிழ் அரசியல் கைதிகளின் விடுதலை தொடர்பில் தீர்வைப் பெற்றுத்தர வேண்டும் என்று அவரிடமும் கோரியிருந்தோம்.

இத்தகைய நிலையில் சட்டம், ஒழுங்கு அமைச்சு பிரதமரிடம் கையளிக்கப்படாமல் சர்ச்சைக்குரிய நிலையிலேயே உள்ளது. எனவே அரசியல் கைதிகள் விடயம் தொடர்பில் தீர்மானம் மேற்கொள்ளும் அதிகபட்ச அதிகாரம் தற்போது ஜனாதிபதியிடமே உள்ளது. எனவே ஏற்கனவே வாக்குறுதி அளித்தவாறு அரசியல் கைதிகள் விடுதலை குறித்த காத்திரமானதொரு தீர்மானத்தை ஜனாதிபதி மேற்கொள்ள வேண்டும்.

வடக்கு, கிழக்கில் இராணுவத்தினர் வசமுள்ள தனியார் காணிகள் இம்மாதம் 31ஆம் திகதிக்கு முன்பதாக விடுவிக்கப்பட வேண்டும் என்று ஜனாதிபதி பணிப்புரை விடுத்துள்ள போதிலும், இதுவரையிலும் படையினர் வசமுள்ள தனியார் காணிகள் அனைத்தும் விடுவிக்கப்படவில்லை.

காணி உறுதிப்பத்திரங்கள் உள்ள தனியார் காணிகளை முதலில் விடுவிப்பதாக இராணுவம் கூறுவதை ஏற்றுக்கொள்ள முடியாது. ஜனாதிபதியின் பணிப்புரையின்படி இம்மாத இறுதிக்குள் அனைத்து தனியார் காணிகளும் விடுவிக்கப்பட வேண்டும் என்பதே எமது நிலைப்பாடாகும். ஆனால் இன்னமும் அனைத்துக் காணிகளும் விடுவிக்கப்படவில்லை. தனியார் காணிகளை விடுவிக்கும் பட்சத்தில் தமது இராணுவத்தளங்களை அமைத்துக் கொள்வதற்கு வேறு காணிகள் மற்றும் நிதி வழங்கப்பட வேண்டும் என இராணுவத்தினர் கோரிக்கை விடுத்துள்ளனர். அவற்றை கருத்திற்கொண்டு நிறைவேற்ற வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பாகும். எனவே வடக்கு, கிழக்கில் படையினர் வசமுள்ள தனியார் காணிகள் விடுவிக்கப்படுவதற்கு விரைவான நடவடிக்கைகள் முன்னெடுக்கப்பட வேண்டும் என்றார்.

# யாழில் மிகவும் உணர்வுபூர்வமாக சுனாமி நினைவேந்தல்

ஆயிரமாயிரம் உயிர்களை காவுகொண்ட சுனாமி அனர்த்தத்தின் 14ஆம் ஆண்டு நினைவேந்தல், யாழ்ப்பாணத்தின் பல பகுதிகளில் நேற்று புதன்கிழமை மிகவும் உணர்வுபூர்வமாக அனுஷ்டிக்கப்பட்டது.

இந்தோனேசியாவில் கடலுக்கு அடியில் உருவெடுத்த சுனாமி பேரலை, இலங்கையின் கரையோர பகுதிகளில் குறிப்பாக வடக்கு கிழக்கில் அதிக பாதிப்பை ஏற்படுத்தியது. நேற்று 26 ஆம் திகதி இந்த அவலத்தின் 14 ஆவது ஆண்டு நினைவுகூரப்பட்டது.

யாழ். மாவட்டத்தில் பல இடங்களில் நினைவேந்தல் நிகழ்வு இடம்பெற்றது. குறிப்பாக வடமராட்சி கிழக்கு - உடுத்துறை சுனாமி நினைவாலயத்தில் மிகவும் உணர்வுபூர்வமாக இந்நிகழ்வு இடம்பெற்றது. உறவுகளை இழந்தவர்கள் கண்ணீர் மல்க தமது உறவுகளை நினைத்து இதன்போது அஞ்சலி செலுத்தினர்.

மருதங்கேணி பிரதேச செயலகத்தின் ஏற்பாட்டில் இடம்பெற்ற இந்நிகழ்வில் அரசியல் பிரமுகர்களும் கலந்துகொண்டனர்.

அதேபோன்று, நேற்று காலை 9.25 இற்கு யாழ். கச்சேரியில் சுனாமி நினைவஞ்சலி நிகழ்வு இடம்பெற்றது. யாழ். அரச அதிபர் நாகலிங்கம் வேதநாயகன் தலைமையில் இடம்பெற்ற இந்நிகழ்வில், தேசிய கொடி ஏற்றப்பட்டு இரண்டு நிமிட மௌன அஞ்சலி செலுத்தப்பட்டது.

தொடர்ச்சியாக, யாழ்.பல்கலையில் சுனாமி நினைவேந்தல் அனுஷ்டிக்கப்பட்டது. சுனாமி அனர்த்தத்தில் உயிரிழந்தவர்களை நினைவுகூர்ந்து மெழுகுவர்த்தி ஏற்றி, மலர்தூவி இதன்போது அஞ்சலி செலுத்தப்பட்டது. பேராசிரியர்கள், மாணவர்கள், கல்விசாரா ஊழியர்கள் அனைவரும் இந்நினைவஞ்சலி நிகழ்வில் கலந்துகொண்டனர்.

# LIFE INSURANCE
*Mortgage Insurance*
*Line of Credit Insurance*

| Age | | 25 | | 40 | | 50 | |
|---|---|---|---|---|---|---|---|
| | | M | F | M | F | M | F |
| **Term Life Insurance / Mortgage Insurance** | | | | | | | |
| 200k | T20 | 17 | 14 | 27 | 20 | 65 | 47 |
| 500k | T20 | 35 | 24 | 54 | 35 | 144 | 94 |
| **Permanent Life Insurance - Premium Never Change** | | | | | | | |
| 200k | WL | 81 | 71 | 150 | 131 | 233 | 200 |
| 500k | WL | 188 | 164 | 364 | 313 | 590 | 488 |
| **Critical Illness Insurance 100% Money Back** | | | | | | | |
| 50k | T75 | 44 | 42 | 90 | 85 | 177 | 148 |
| 100k | T75 | 76 | 72 | 157 | 145 | 321 | 265 |

**Living Benefits / Income Replacement**
* if you get sick, accident or Soft tissue injury
* for self employed
* for business people
if you don't have benefits
* 2 years, 5 years up to age 70 (long term disablity) claim எடுக்காவிட்டால் 50% பணம் மீள பெறமுடியும்

**20 வருடம் மட்டும் பணம் செலுத்தும் காப்புறுதி**

இருபது வருடங்களுக்கு பின் பணம் கட்ட வேண்டியதில்லை. ஆனால் வாழ் நாள் முழுவதும் உங்களுக்கு காப்புறு- தி இருக்கும். 20 வருடங்களுக்கு பின் விரும்பினால் காசு பெறுமதியை (Cash value) பெறமுடியும்.

**மருத்துவ பரிசோதனை எதுவும் இல்லாத காப்புறுதி**

20 YEARS NON-MEDICAL TERM INSURANCE

| Age | $100k M/F | $200k M/F |
|---|---|---|
| 30 | $21/18 | $36/28 |

இலவச ஆலோசனைக்கு அழையுங்கள்
**Philip Chandran**
Liland Insurance
**416-450-9043**
philipsam0715@hotmail.com

**INCOME TAX** (22 years experience)
* All year round, any tax problem with CRA, I can resolve it.
* new business registration * Accounting
* Bookkeeping * Payroll, HST

**Super visa, RRSP Loan, RESP (Education), Travel Insurance**
கொடிய நோய்களுக்கான காப்புறுதி (critical illness) for 25 sickness நோய் வராத பட்சத்தில் கட்டிய பணம் முழுக்க மீள் பெற முடியும்

# ABC Driving School

Pickering, Ajax, Whitby & Oshawa

**Tony (Easan)**
Tel: 416.414.4942
Email: abcdrivingschool@gmail.com

**Exam Car Available**









**COMMUNITY TRANSIT SERVICES**

**COMMUNITY TRANSIT SERVICES**
- Grocery Shopping
- School Transport
- Ariport Service
- Tour Service
- Party Pickup
- Family Shopping
- Senior Transit
- Food Delivery
- Doctor Appointment

Tina +1 647 677 6109
Shan +1 416 907 8888
communitytransitservice
communitytransitservice
communitytransitservice.com
communitytranscare@gmail.com



"Call me today for a free home and auto insurance quote!"

**வீடு மற்றும் வாகனக் காப்புறுதி**
**HOME + AUTO = MORE SAVINGS***

  



**Allstate**®
You're in good hands



**RAJI LINGHAN**
*Agent*
CELL: 416-817-5060
289-460-3217
905-427-2827 Ext 5020

*Inclusive of all other discounts applied to Allstate's base rates. Terms and conditions apply and may vary by region. Rates and discounts subject to change. ®Trademark used under licence by Allstate Insurance Company

# பர்ணான்டோ
# கருவாட்டுக்கடை



- கட்டா கருவாடு
- அறக்குளா கருவாடு
- சுறா கருவாடு
- சூரை கருவாடு Balay
- நெத்தலி கருவாடு
- பொம்பிலி கருவாடு



எல்லா வகையான கருவாடுகளும் நேரடியாகவும், அனைத்து தமிழ் வர்த்தக நிலையங்களிலும் கேட்டு வாங்கலாம்!

**எமது புதிய முகவரி:**

3441 St.Clear Ave., East
Birchmount Rd and Warden Ave. க்கு இடையில் அமைந்துள்ளது.

**647-857-1336**

# வெள்ள அனர்த்த நிவாரணப்பணி

தாயகத்தின் வடக்கு கிழக்கு பகுதிகளில் யுத்தத்தினால் பாதிக்கப்பட்டிருக்கும் மக்களின் நல்வாழ்வினை கருத்தில் கொண்டு, பாதிப்புற்றிருக்கும் அம்மக்களை ஆரோக்கியமான சமூகமாக கட்டியெழுப்பும் நோக்குடனும் களத்திலும் புலத்திலும் வாழும் உறவுகளை கூட்டிணைத்து மக்கள் நலன் காப்பகம் செயற்பட்டு வருகின்றது.

தாயகத்தின் சகல மாவட்டங்க ளில் சமூகபணியாற்றும் கள மற்றும் புலம்பெயர் தனிநபர்கள், அமைப்புக்களுடன் கூட்டிணைந்து மக்கள் நலன் காப்பகம் ,யங்கி வருகின்றது.

பாதிக்கப்பட்ட மக்களின் உணவு, மருத்துவம், வாழ்விடம் மற்றும் வாழ்வாதார பிரச்சனைகள் மற்றும் தேவைகளுக்கு மக்கள் நலன் காப்பம் முன்னுரிமை வழங்குகின்றது.

வெள்ள அனர்த்த விளைவுகளும் தேவைகளும் இலங்கை இடர் முகாமைத்துவ நிலையத்தின் தகவலின் அடிப்படையில் (25.12.2018) வடமாகாணத்தில் உள்ள 5 மாவட்டத்தில் மொத்தமாக 23,054



குடும்

பங்களை சேர்ந்த 73,851 பேர் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டுள்ளதுடன் 39 முகாம்களில் 3,698 குடும்பங்களை சேர்ந்த 11,310 பேர் தங்கவைக்கப்பட்டுள்ளனர்.

26 வீடுகள் முழுமையாகவும் 316 வீடுகள் பகுதியளவிலும் பாதிக்கப்பட்டுள்ளதாகவும் குடிசைகளில் வாழ்ந்த மக்கள் ,க்கணக்கெடுப்புக்குள் உள்வாங்கப்படவில்லை எனவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

போக்குவரத்துக்கள் பாதிப்புற்றுள்ளமையாலும் தொழில்வாய்ப்புக்கள் இன்மை யாலும் வெள்ள நீர் வீடுகளுக்குள் புகுந்தமையாலும் மக்கள் உணவு, உடை, தரை விரிப்பு, சுத்தமான குடிநீர், பெண்கள் சிறுவர்களுக்கு தேவையான சுகாதார பொதிகள் உடனடித்தேவையாக உள்ளன.

புல அமைப்புக்கள் மற்றும் இலங்கை அரச துறையினர் உணவு தொடர்பாக கூடிய கவனம் செலுத்தியுள்ள போதும் சிறுவர்களுக்




கான பால்மா, சிறுவர் பெண்களுக்கான சுகாதார பொதிகள், பாதைகள் தடைப்பட்ட பகுதி யில் உள்ள மக்களுக்கான உணவு மற்றும் மருந்துகள் உடைகள் உடனடி தேவையாக உள்ளன. அதேவேளை முகாம்களுக்கு செல் லாது தமது வாழ்விடத்தில் தங் கியுள்ள மக்களுக்கு தரை விரிப்புகள் குடிசைகளில் வாழும் மக்களுக்கு கூரை விரிப்புகள் அவசரமாக தேவைப்படுகின்றன. அத்துடன் டெங்கு நோய் வேகமாக பரவி வருவதனால் நுளம்பு வலை அதிகமாக தேவைப்படுகின்றது.

மக்கள் நலன் காப்பகத்தின் வெள்ள அனர்த்த முகாமைத்துவப்பணி மக்களை மீட்பதிலும் பராமரிப்பதிலும்.மக்கள் நலன் காப்பகம் செயல்பட்டு வருகின்றது.

முல்லை மாவட்டம் முறிகண்டி பிரதேச இந்துபுர கிராம பிரிவுக்குட்பட்ட மக்களை சபாலிஸ் மற்றும் உத்திதயாகத்தர்களுடன் இணைந்து மக்கள் நலன்காப்பகம் மீட்புப் பணியில் ஈடுபட்டு அம்மக்கள் அளைவளரயும் மீட்டு இந்துபுர கிராம அலுவலகர் பிரிவு பொது நோக்கு மண்டபத்தில் தங்க



ளவக்கப்பட்டுள்ளனர்.

மக்கள் குழந்தைகள் உட்பட அளைவரினதும் உணவு, உடை தேவைகள் யாவும் முழுமையாக மக்கள் நலன் காப்பகம் பொறுப்பெடுத்து நடாத்தி வருகின்றது.



அத்துடன் பொன்நகர் மக்கள் முறிகண்டி பிரதேசத்தில் உள்ள அ.த.க பாடசாலையில் தங்கவைக்கப்பட்டுள்ளனர். அவர்களுக்காக பிஸ்கட் பால்மா வகைகள் உடன் வழங்கப்பட்டது.

கிளிநொச்சி மாவட்டம் பரந்தன்





3ம் வாய்க்கால் பன்னங்கண்டி மக்கள் அ.த.க பாடசாலையில் தங்கவைக்கப்பட்டுள்ளனர்.

மருதநகர் பொதுநோக்கு மண்டபத்தில் தங்கவைக்கப்பட்ட மக்களுக்கும் குடிநீர் பிஸ்கட் வகைகள் மக்கள் நலன் காப்பகத்தால் வழங்கி வைக்கப்பட்டது.

கிளிசநாச்சி மாவட்டம் கண் டாவளை பிரதேசத்திற்க்கு உட்பட்ட குமாரசாமிபுரம் நலன்புரி நிலையத்திற்க்கும். பச்சிலைப்பள்ளி பிரதேசத்திற்க்குட்பட்ட இயக்கச்சி பொது நோக்கு மண்டபத்தில் அளமந்துள்ள நலன்புரி நிலையத்திற்க்கும். முல் லைத்தீவு மாவட்டம் புதுக்குடியிருப்பு பிரதேச செயலகத்திற்கு உட்பட்ட சுகந்திரபுரம் கொலனி நலன்புரி நிலையத்திற்கும் அத்தியாவசிய மருத்துவப் பொருட்கள் அடங்கிய பொதிகள் வழங்கிவைக்கப்பட்டுள்ளன. அத்துடன் ஒட்டுசுட்டான் பிரதேச சபைக்குட்பட்ட முறிகண்டி இந்துபுரம் பொதுநோக்கு மண்டபத்தில் அளமந்துள்ள நலன்புரி நிளலயத்திற்கு சமைத்த உணவு வழங் கிவைக்கப்பட்டது.

### நிவாரணப் பணிக்கான உதவிகோரல்

அன்பான உறவுகளே...

மழை வெள்ளத்தினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உணவு, பாதுகாப்பான குடிநீர், உடை,குழந்தைகளுக்கான பால்மா, சிறுவர் பெண்களுக்கான சுகாதார பொதிகள்,தரை மற்றும் கூரை விரிப்புக்கள் தேவையாக உள்ளன.

எனவே, புலம்பெயர் உறவுகள்,அமைப்புக்கள் கொடையாளிகளிடமிருந்து உதவிகளை எதிர்பார்க்கின்றோம்.

**"மக்கள் நலன் காப்பகம்"**
**நடுவப்பணியகம்**
**கரடிப்போக்கு சந்தி**
**கிளிநொச்சி**
**தாயக தொலைபேசி இலக்கம்**
**021 228 4070**
**சர்வதேச தொடர்பாடல்:**
**இணைப்பாளர்**
பி. உதயகுமாரி
**+1 (416) 301 - 8731**
**இ-மெயில்:**
pwa@gmail.com
Facebook:
**மக்கள் நலன் காப்பகம்**
**அத்துடன்**
Sun City Super Market,
276-U17/18
Markham Road,
Toronto
**(கண்ணன்-416-724-6666)**
**என்பவர்கள் ஊடாகவும் உதவிகளை வழங்கலாம்.**
**நன்றி**

# இனவழிப்பு ஒப்பந்தம் 70 ஆண்டுகளின்பின் - தடுக்கவும் தண்டிக்கவுமான உறுதிமொழியைக் கண்டுகொள்ளாத இடத்தில் பன்னிலைப்பட்ட பங்காளரையும் ஒன்றுகூட்டி சிறிலங்காவின் தமிழர் இனவழிப்புக்கு நடவடிக்கை கோரிய கருத்தரங்கம்

நாடுகடந்த தமிழீழ அரசாங்கம் நடத்திய நிகழ்ச்சியான இனவழிப்பு ஒப்பந்தம் 70 ஆண்டுகளின்பின் - தடுக்கவும் தண்டிக்கவுமான உறுதிமொழியைக் கண்டுகொள்ளாத இடத்தில் பன்னிலைப்பட்ட பங்காளரையும் ஒன்றுகூட்டி சிறிலங்காவின் தமிழர் இனவழிப்புக்கு நடவடிக்கை கோரிய கருத்தரங்கம், 10-12-2018.




இலண்டன், பிரித்தானியா, திசம்பர் 26, 2018 இனவழிப்புக் குற்றத்தைத் தடுப்பதும் தண்டிப்பதும் பற்றிய ஒப்பந்தத்தின் 70ஆம் ஆண்டு நினைவைக் கொண்டாடும் வகையில் நாடுகடந்த தமிழீழ அரசாங்கம் திசம்பர் 10ஆம் நாள் இலண்டனில் பிரித்தானிய நாடாளுமன்ற வளாகத்தில் பெருமைக்குரிய பேச்சாளர்களையும் விருந்தினர்களையும் ஒன்றுகூட்டிய நிகழ்வில் இனவழிப்பு ஒப்பந்தத்தின் நோக்கத்துக்கும் செயற்பாட்டுக்குமான இடைவெளியைக் கடப்பது எப்படி, அதிலும் குறிப்பாகப் பொறுப்புக்கூறல் என்று வரும் போது இந்த இடைவெளியைக் கடப்பது எப்படி என்பது குறித்து விவாதிக்கப்பட்டது.

இனவழிப்பு ஒப்பந்தம் 70 ஆண்டுகளின்பின் - தடுக்கவும் தண்டிக்கவுமான உறுதிமொழியைக் கண்டுகொள்ளாத இடத்தில் என்ற தலைப்பிலான கருத்தரங்கம், பத்தாண்டு முன்னர் நடந்த ஆயுதப் போரின் இறுதிக் கட்டங்களில் சிறிலங்கா தமிழர் இனவழிப்புக்கு பன்னாட்டுச் சமுதாயம் சிறிலங்காவைப் பொறுப்புக்கூறும்படி செய்திட எடுக்கக்கூடிய செயல்சார் நடவடிக்கைகளையும் விரிவாக எடுத்தியம்பிற்று.

தடுப்பதும் தண்டிப்பதும் ஒன்றையொன்று சார்ந்திருப்பன என்ற கருத்துக்கு அழுத்தம் தர வேண்டும் என்பதற்காகவே இந்தக் கருப்பொருளைத் தெரிந்தெடுத்தோம். குற்றங்கள் தண்டிக்கப்படாமற்போவதே கொடுமைகள் விளைய வளநிலமாகிப் போகிறது, இனவழிப்பு ஒப்பந்தம் பிறந்த கதையே இதற்குத்தான் சான்றாய் உள்ளது என்று நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தின் பிரதமர் இந்நிகழ்வில் காயலை (Skype) வழி உரையாற்றுகையில் குறிப்பிட்டார்.

கருத்தரங்கில் உரையாற்றிய மற்றவர்கள் விரிவான பல பங்காளர்களின் நிலைப்பாடுகளையும் குறித்து நின்றனர். அவர்களில் பிரித்தானிய நாடாளுமன்ற உறுப்பினர்கள் சியொபான் மக்டொனா, கரெத் தொமஸ், புகழ்மிகு மனிதவுரிமைச் சட்டவாளர்கள் பீட்டர் ஹெய்ன்ஸ்-கியூசி (QC), ரிச்சார்டு ரோஜர்ஸ், அலெக்ஸ் பிரெசான்ரி, கிம் ரென்ப்ரு, இனவழிப்பைத் தடுப்பதற்கும் தண்டிப்பதற்குமான பன்னாட்டு மைய (ICPPG) இயக்குநர்களில் ஒருவரான அம்பிகை சீவரட்ணம், தமிழ் இளையோர் அமைப்பைச் (TYO) சேர்ந்த சபாபதி கிருஷாந்த் ஆகியோரும் அடங்குவர்.

இனவழிப்புக்கான இரண்டாம் பன்னாட்டுத் தீர்ப்பை வரைய உதவிய ரிச்சார்டு ரோஜர்ஸ் அவர்கள் உரையாற்றுகையில், இனவழிப்பு ஒப்பந்தமானது இனவழிப்பு நடந்துவரும் ஒன்றாக இருப்பதையும் அதன் குறிப்பான தனித்தன்மையையும் உலகறியச் செய்வதிலும், இவ்வகைக் குற்றங்கள் குறித்து அருவருப்பு (stigma) உண்டாக்குவதிலும் பெரிதும் வெற்றி பெற்றுள்ளது என்றார். இருந்தபோதும் இவ் ஒப்பந்தம் இனவழிப்பைத் தடுப்பதில் அவ்வளவாகப் பயன்படவில்லை என்றும் கூறினார். மேலும், நமக்கு உண்மையில் தேவைப்படுவது என்ன? இனவழிப்பின் தொடக்க அறிகுறிகள் தென்படும் போதே விரைந்து செயல்பட அரசுகள் மேலும் உறுதிகாட்ட வேண்டும் என்றும் எடுத்துரைத்தார். லெம்கின் அவர்களின் கனவு மெய்ப்பட வேண்டும் என்றால், மேலும் இனவழிப்புகள் நிகழாமல் தடுக்க வேண்டுமென்றால், வலிமைமிக்க அரசுகள் தன்னலத்தை ஒதுக்கி வைத்து விட்டு, குற்றங்களுக்கெல்லாம் குற்றமான இனவழிப்பைத் தடுக்க ஒன்றுபட்டு உழைக்க வேண்டும் என்றார் ரோஜர்ஸ்.

உக்ரைனிலும் கம்போடியாவிலும் ஜார்ஜியாவிலும் பன்னாட்டுக் குற்றங்களால் பாதிப்புற்றோரின் சார்பாளரும், இப்போது கிமர் ரூஜ் தீர்ப்பாயத்தில் இனவழிப்புக் குற்றம் சுமத்தப்பட்ட ஒருவரின் சார்பாளரும் ஆகிய அலெக்ஸ் பிரெசான்ரி பேசுகையில் சொன்னார்: கிமர் ரூஜ் தீர்ப்பாயத்திலிருந்து சிறிலங்காவில் பாதிப்புற்றோர் பெற்றுக் கொள்ள வேண்டிய நேர்நிறையான பாடம் ஒன்று உண்டு. ஆண்டுகள் கழித்தேனும் நீதி கிட்டலாம் என்பதே அது. மேலும், பன்னாட்டுக் குற்றங்களுக்கான சான்றினை உறுதியாக ஆவணப்படுத்திப் பாதுகாத்தல் இன்றியமையாத் தேவை, இது தொடரந்து நடக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

லெபனானுக்கான சிறப்புத் தீர்ப்பாயத்தில் பாதிப்புற்றோருக்கான முன்னணி சட்டச் சார்பாளரான பீட்டர் ஹெய்ன்ஸ் பேசுகையில், 1948க்குப் பின் பன்னாட்டுக் குற்றவியல் மற்றும் மனிதநேயச் சட்டம் (ICHL) என்பது காத்திரமான ஒன்றாகி விட்டது என்றார். ஆனால் குற்றங்கள் தண்டிக்கப்படாமற்போகும் நிலைக்கு முற்றுப்புள்ளி வைப்பதற்கான நடைமுறை இன்னமும் சாத்தியமாகவில்லை என்றார். சிக்கல் என்னவென்றால், பன்னாட்டுக் குற்றவியல் மற்றும் மனித நேயச் சட்டத்தின் சட்டங்களில் மக்களின் எதிர்பார்ப்புகள் மிகப் பெரியனவாய் உள்ளன என்றார் இனப்படுகொலை விசாரணை செய்யும் அரசியல் (political will) மனத்திட்பம்தான் அவசியமாகும் என்றார். பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்ற வழக்குத் தொடுப்பர்களும், கனடாவிலும் பிரான்சிலும் உள்நாட்டு வழக்குத் தொடுப்பர்களும் செய்துள்ள முயற்சிகளை எடுத்துக்காட்டினார். பன்னாட்டு நீதி என்பது தானாகவே ஒவ்வொன்றையும் சரிசெய்து விடாது என்றார். பாதிப்புற்றோர்க்கு நீதி கிடைக்கச் செய்வது பாராட்டத்தக்கது. ஆனால் நீதி என்பதன் பொருள் சிறைத்தண்டனைக்கும் மேலானது. பன்னாட்டுக் குற்றவியல் மற்றும் மனிதநேயச் சட்டம் இப்போதுதான் இழப்பீடுகள், பின்விளைவுத் தொடர்ச்சி போன்ற கருத்தாங்கங்களை கவனத்தில் எடுக்கத் தொடங்கியுள்ளது என்றார். இனவழிப்பு என்ற குற்றச்சாட்டை நிரூபிப்பது கடினம், அதேசமயம் ஒரு நாடு அந்த முத்திரையோடு வாழ்வதும் கடினம் என்று சொல்லி முடித்தார்.

இனவழிப்பைத் தண்டிப்பதற்கும் தடுப்பதற்குமான பன்னாட்டு மையத்தைச் சேர்ந்த அம்பிகை சீவரட்ணம் அவர்கள் பேசுகையில் இனவழிப்பினால் பாதிப்புற்றோரே சாட்சியமளிப்பதன் முக்கியத்துவத்தை வலியுறுத்தினார். இனவழிப்புக் குற்றம் புரிந்தவர்களைத் தண்டிப்பதற்கு மட்டுமல்லாமல், இனவழிப்பு எங்கே நடந்தாலும் பன்னாட்டுச் சமுதாயம் அதனை இனவழிப்பு என்றே அறிந்தேற்கச் செய்யும் கடினமான பணிக்கும் கூட இந்த சாட்சியம் இன்றியமையாதது என்றார்.

சபாபதி கிருஷாந்த் பேசுகையில், புலம்பெயர் தமிழ் இளைஞர்களின் கண்ணோட்டம் குறித்து கருத்து வழங்கினார். நீதிக்கும் பொறுப்புக்கூறலுக்குமான தமிழர் போராட்டம் குறித்துத் தன் தலைமுறையினர்க்கு தெளிவான புரிதல் இருப்பதாகச் சொன்னார். தானும் தன் வயதை ஒத்தவர்களும் தமிழர் போராட்டத்தை நீதிமன்றக் கூடங்களுக்குள் அடங்கிய ஒன்றாகப் பார்க்கவில்லை என்றார். தமிழ் மக்களின் வரலாற்றுக் கதையாடலையும், தற்சார்பான, இறைமைகொண்ட தேசமாகத் தமிழீழத்தின் வரலாறு பற்றிய உண்மையையும் பாதுகாப்பதற்கான விரிந்தகன்ற பெருமுயற்சியாகவே பார்க்கிறோம் என்றார்.

தமிழ் மக்களுக்கு எதிராக இழைக்கப்பட்ட குற்றத்தின் பரிமாணத்தையும் (magnitude) கொடுமையையும் உணர்த்த இன வழிப்பு என்பகைக் தவிர வேறு சொல் இருக்க முடியாது. முள்ளிவாய்க்கால் பெருங்கொடுமையை இனவழிப்பு என்று அறிந்தேற்காமைக்கான அரசியல் காரணம் என்னவென்றால், ஆபிரிக்க மனிதவுரிமைத் தீர்ப்பாயங்களும் கியுபெக் தொடர்பாக கனடா உச்ச நீதிமன்றமும் தெரிவித்துள்ள கருத்துகள் காட்டியுள்ளபடி, மரபுவழிவந்த நீதிநெறிமுறையின் அடியொற்றி, இனவழிப்புக்குள்ளாக்கப்பட்ட ஒரு இனம் தன்னைப் பாதுகாத்துக்கொள்ளும் சர்வதேச சட்டங்களின் அடிப்படையில் ஒரு தனிநாடு அமைத்துக் கொள்ளும் உரிமையுடையது என்பதே. நிலைமாற்ற நீதிநெறிமுறையும் கூட இழப்பீடுகளையும் மீள்நிகழாமையையும் தன் நான்காம் தூணாகக் கொண்டிருப்பதால், தனிநாடு அமைப்பதை நியாயப்படுத்த முடியும் என்கிறது என்று பிரதமர் உருத்திரகுமாரன் கூறினார். இப்போது தமிழர்களின் பாதுகாப்பை உறுதி செய்யும் அரசியல் ஏற்பாட்டை வகுப்பதை விடவும் சிறிலங்காவை ஒரு நாடாக வைத்துக்கொள்ளவே பல அரசுகள் விரும்புகின்றன. அதன் காரணமாகவே முள்ளிவாய்க்காலில் நடந்ததை இனப்படுகொலை என ஏற்றுக் கொள்ளத் தயங்குகின்றன என்றும் அவர் கூறினார்.

நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தின் பிரதமர் உருத்திரகுமாரன் உலக அரசுகளுக்கு ஒரு செயலழைப்பையும் விடுத்தார்:

சிறிலங்கா தொடர்பாக இனவழிப்பு ஒப்பந்தத்துக்குப் பொருட்செறிவூட்ட (to give meaning), அவ்வொப்பந்தத்தில் ஒப்பமிட்ட அரசுகளில் ஒன்று பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றத்தில் (ICJ) சிறிலங்காவுக்கு எதிராகச் சட்ட நடவடிக்கை முன்னெடுக்க அழைக்கிறோம். சிறிலங்கா தொடர்பாகவும் சரி, வேறுபல சந்தர்ப்பங்களிலும் சரி, வழக்கமாக வெறும் தனியாட்கள் அல்ல, முழு அரசு எந்திரமுமே இந்தக் கொடுங்குற்றத்தை இழைக்கக் காண்கிறோம். அதாவது அரசுகளே இக்குற்றம் புரிகின்றன. இவ்வாறு கூறிய உருத்திரகுமாரன் மேலும் சொன்னார்: அரசுகள் தமது அயல் இறைமைக் குற்றவிலக்குரிமைச் சட்டத்தைத் திருத்தி இன அழிப்புக் குற்றம் தொடர்பாக அரசுகளுக்கான குற்ற விலக்குரிமையை அகற்றும்படியும், தங்கள் உள்நாட்டுத் தீர்ப்பாயங்களில் இனவழிப்புக் குற்றத்துக்காக அரசுகளை எதிர்த்துச் சட்ட நடவடிக்கை முன்னெடுக்கும்படியும் அரசுகளை வேண்டுகிறோம்.

இந்நிகழ்ச்சி சிறிலங்காவைப் பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றப் பார்வைக்கு அனுப்புக என்பதற்காக நாடுகடந்த தமிழீழ அரசாங்கம் நடத்தி வரும் கையொப்ப இயக்கத்தின் வெற்றியையும் வெளிச்சமிட்டுக் காட்டிற்று. இந்த இயக்கம் நாளது வரை கிட்டத்தட்ட இருபது இலட்சம் கையொப்பங்களைத் திரட்டியுள்ளது. ஆதரவு திரட்டும் பணி செய்து வரும் செயல்வீரர்களுக்கு இந்நிகழ்வில் அறிந்தேற்புச் சான்றிதழ்கள் வழங்கப்பட்டன.

நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தில் மனிதவுரிமை மற்றும் பெருந்திரள் கொடுமைகள், இன அழிப்புக்கெதிரான அமைச்சராயிருக்கும் திரு பத்மனாதன் மணிவண்ணன் நன்றிநவில மாலைப்பொழுது இனிதே நிறைவுற்றது.

சிறிலங்காவைப் பன்னாட்டுக் குற்றவியல் நீதிமன்றப் பார்வைக்கு அனுப்புக என்பதற்கான கையொப்ப இயக்கத்தில் பெயர் கொடுங்கள். http://www.tgte-icc.org/

நாடுகடந்த தமிழீழ அரசாங்கம் (TGTE) என்பது தேசியம், தாயகம், தன்னாட்சி ஆகிய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்ட குடியாட்சிய அரசியல் அமைப்பாகும். நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தின் அமைப்புச்சட்டம் குடியாட்சியக் கொள்கைகளைப் பொறித்துக் கொண்டுள்ளது. நா.க.த.அ தன் அரசியல் குறிக்கோள்களை குடியாட்சிய வழிகளில் அடையக் கட்டளையிடுகிறது. 2009ஆம் ஆண்டு சிறிலங்காவில் ஆயுதச் சண்டையின் இறுதி மாதங்களில் தமிழ் மக்களின் பெருந்திரள் படுகொலைக்குப் பிறகு நாடுகடந்த தமிழீழ அரசாங்கம் அமைக்கப்பட்டது.

தமிழ் மக்களுக்கு எதிராகப் போர்க்குற்றங்களும், மானிட விரோதக் குற்றங்களும் இனவழிப்புக் குற்றமும் செய்த சிறிலங்காவை நீதியின் முன் நிறுத்தும்படியும் தமிழர்களின் அரசியல் எதிர்காலத்தை முடிவு செய்யப் பொதுவாக்கெடுப்பு நடத்தும்படியும் நாடுகடந்த தமிழீழ அரசாங்கம் பன்னாட்டுச் சமுதாயத்தை வேண்டுகிறது.

மேலுமறிய, பார்க்கவும்: www.tgte-us.org

## நிகழ்வுகளின் அரங்கமுரசு

பாஷா - 2018 ஆம் ஆண்டின் ஒரு குளிர்கால நிகழ்வு - UTSG TSA
Scarborough Convention Centre
20 Torham Place, Scarborough ON
M1X 0B3
Dec 27, Thu 6:00 PM

* * *

கனடா வாழ் மல்லாகம் மக்களின் ஒன்றுகூடல்
JC's Banquet Hall
1686 Ellesmere Rd, Scarborough ON
M1H 2V5
Dec 29, Sat 6:00 PM

* * *

கொழும்பு றோயல் கல்லூரி முன்னாள் மாணவர்கள் நடாத்தும் 28ஆவது வருடாந்த றோயல் இரவு
Scarborough Convention Centre
20 Torham Place, Scarborough ON
M1X 0B3
Dec 31, Mon 6:30 PM

* * *

பக்திப் பாமாலை 2019
துர்க்கேஸ்வரம் ஆலயம்
30 Carnforth Rd, North York, ON
M4A 2K7
Jan 01, Tue 5:00 PM

* * *

வேலணை மக்கள் ஒன்றியம் வழங்கும் பதியம் கலைவிழா 2019
Sri Iyappan Hindu Temple
635 Middlefield Rd, Scarborough ON
M1V 5B8
Jan 05, Sat 5:00 PM

* * *

கனடிய தமிழ் மரபுரிமை சங்கம் நடாத்தும் தமிழ் மரபுத்திங்கள் ஆரம்ப நிகழ்வு 2019
Markham Civic Centre
101 Town Centre Blvd, Markham ON
L3R 9W3
Jan 10, Thu 6:00 PM

* * *

கனடா திருமறைக் கலாமன்றம் நடாத்தும் பொங்கல் விழா 2019
Sathiya Saibaba Hall
5321 Finch Ave. Scarborough ON
M1S 5W2
Jan 12, Sat 6:30 PM

* * *

16.01.1993 அன்று வங்கக் கடலில் வீரகாவியம் எழுதிச் சென்ற கேணல் கிட்டு உட்பட 10 மாவீரர்களின் நினைவுகள் சுமந்த 26ஆவது ஆண்டு தமிழர் மரபுரிமை திங்கள்

* * *

கனடிய தமிழர் பேரவையின் 12வது வருடாந்த பொங்கல் விழா
Hilton Toronto/Markham Suites Conference
8500 Warden Ave, Markham ON
L6G 1A5
Jan 19, Sat 5:00 PM

* * *

மிசிசாகா தமிழ் ஒன்றியம் நடாத்தும் தமிழ் மரபுத்திங்கள் தைப்பொங்கல் விழா 2019
Port Credit Secondary School
70 Mineola Rd, E. Mississauga ON
L5G 2E5
Jan 19, Sat 4:00 PM

* * *

கனடா தமிழ்க் கலைக் கல்லூரி நடாத்தும் - தமிழியல் மாநாடு 2019
Markham Convention Centre
2901 Markham Rd, Scarborough ON
M1X 0B6
Jan 26 & 27 Sat & Sun 9:00 AM

* * *

கனடிய தமிழர் தேசிய அவையின் மாபெரும் நிகழ்வு 2019
Markham Convention Centre
2901 Markham Rd, Scarborough ON
M1X 0B6
Jan 27, Sun 5:00 PM





**கருவி மாற்றுத்திறனாளிகளின் சமூக வள நிலையம் சர்வதேச மாற்றுத்திறனாளிகள் தினத்தையொட்டி அகில இலங்கை ரீதியில் நடாத்தப்பட்ட கவிதைபோட்டியில் முதலிடம் பெற்ற கவிதை.**

### ஊனம் என்பது குறைவல்ல

ஊனம் என்பது குறைவல்ல - மனித
வாழ்வில் யாரும் நிறைவல்ல
குறையாவும் தினம் பலர் சொல்ல - எழுநடர்
நிரையாவோம் வானம் தனைவெல்ல

காதுகளில் தினமும் கதை கேட்க
மூடர்கள் இல்லை நாம் அதை ஏற்க
ஒரு நாள் உலகம் எமைப்பார்க்க - பாடம்
சொல்வோம் இணைந்து இனம் கற்க

கண்கள் இருந்தும் நீ குருடன் - உழைக்க
கைகள் இருந்தும் நீ திருடன்
வளம் இருந்தும் பிழைக்காத மூடனே
வலம் இழந்த எமைப்பார்த்து நகைப்பதேன்?

நான் காண்டு தோறும் எம்மவர் பதக்கம்
ஒலிம்பிக்கில் இடுகிறது கர்ஜனை முழக்கம்
வலிமிக்க சாதனைகள் வந்ததன் விளக்கம்
எதிர்கால சந்ததிக்கு சரித்திரங்கள் விளக்கம்

முடமென்று உன்விரல்கள் எமைக்காட்டும் - ஆனால்
மூவிரல்கள் முடமென்று உனைச்சுட்டும்
விதண்டாத வாக்குவாதம் இருக்கட்டும் - உலகில்
பாகுபாட்டு பக்க வாதம் ஒழியட்டும்.

**செல்வன் பகீரதன் ஜெறோன்**
**உயர்தரம் - 2018**
**யா/சண்டிலிப்பாய் இந்துக் கல்லூரி**

நிலாந்தன்



# தமிழர்களை ஐக்கியப்படுத்திய வன்னி வெள்ளம்

வன்னி வெள்ளம் தமிழ் மக்களை ஒன்றுபடுத்தியிருப்பதாக தெரிகிறது. சில கிழமைகளுக்கு முன் காஜாப் புயல் வடக்கையும் தாக்கியது. ஆனால் பெரியளவு சேதம் ஏற்படவில்லை. புயல் வரப்போவதையிட்டு துறைசார் அரச திணைக்களங்கள் முன் கூட்டியே எச்சரித்திருந்தன. முகநூலில் யாழ் பல்கலைக்கழகத்தை சேர்ந்த ஒரு புவியியல் விரிவுரையாளர் தொடர்ச்சியாகத் தகவல்களை வழங்கிக்கொண்டிருந்தார். இது தவிர தன்னார்வ அமைப்புக்களும் தனிநபர்களுமாக பெரும்பாலான முகநூல் உலாவிகள் புயலையிட்டு எச்சரித்துக் கொண்டிருந்தார்கள். அவ் எச்சரிக்கைகள் அளவுக்கு மிஞ்சிப் போய்விட்டன என்றும் ஒரு விமர்சனம் எழுந்தது. அனாவசியமாகச் சனங்களைப் பீதிக்குள்ளாகும் நடவடிக்கை அது என்றும் விமர்சிக்கப்பட்டது. ஆனால் புயலின் சேதம் பெரிதாக இருந்திருந்தால் இப்பொழுது வெள்ளத்துக்கு நிவாரணம் வழங்கத் திரண்டது போல தமிழ் மக்கள் வேறுபாடுகளை மறந்து திரண்டிருப்பார்கள் என்பதை மேற்படி அளவுக்கு அதிகமாக எச்சரிக்கைகள் முன்றுணர்த்தின.

எனினும் கஜாப் புயல் தாக்கப் போவதைக் குறித்து இணையப்பரப்பில் குறிப்பாக முகநூல் மற்றும் கைபேசிச் செயலிகளால் பரப்பப்பட்ட எச்சரிக்கைகள் மற்றும் முன்னாயத்த நடவடிக்கைகளின் பின்னணியில் தனிநபர்களும் தன்னார்வத் தொண்டு நிறுவனங்களும் காட்டிய அதேயளவு அக்கறையை அரசியல்வாதிகளோ அல்லது கட்சிகளோ காட்டியிருக்கவில்லை என்ற ஓர் அவதானிப்பும் உண்டு.இயற்கை அனர்த்தமொன்றைக் குறித்துத் தமிழ் மக்களை முன்னெச்சரிக்கையோடு இருக்குமாறு அநேகமாக எந்த ஒரு தலைவரும் அறிவித்திருக்கவில்லை. ஆபத்து வேளையில் தனது குடும்பத்தவர்களை எச்சரிப்பது போல தமது மக்களையும் எந்த ஒரு தலைவரும் பகிரங்கமாக எச்சரித்திருக்கவில்லை.

அது மட்டுமல்ல புயல் தாக்கலாம் என்ற எச்சரிக்கைகளின் பின்னணியில் அடுத்த நாள் பாடசாலைகளை இயக்குவதா? இல்லையா? என்பதைக் குறித்துச் சிந்திப்பதற்கும் ஒருவரும் இருக்கவில்லை. அது பரீட்சைக் காலம் ஆண்டிறுதிப் பரீட்சை. எனவே ஒரு பகுதியில் குழம்பினால் அப்பகுதிக்குத் தனியாக ஒரு பரீட்சையை ஒழுங்கு படுத்தவேண்டியிருக்கும். எனவே அது தொடர்பில் முன்கூட்டியே முடிவெடுத்திருக்க வேண்டும். ஆனால் தீபாவளிக்கு திடீரென்று விடுமுறை அறிவித்த வடமாகாண ஆளுநரும் உட்பட எந்த ஓர் உயர் அதிகாரியும் பாடசாலைகளுக்கு விடுமுறை அறிவிப்பது பற்றிச் சிந்தித்திருக்கவில்லை. புயல் தாக்கியதும் அன்று காலை அதுவும் பாடசாலைக்கு பிள்ளைகள் வரத்தொடங்கிய பின் ஆளுநர் அலுவலகம் விடுமுறை அறிவித்தது. சில பாடசாலைகளில் காலைப் பிரார்த்தனை நடந்து கொண்டிருக்கும் போது அறிவிப்புக் கிடைத்திருக்கிறது. இதனால் அதிகம் திணறியது அரச அலுவலர்கள் தான் பள்ளிக் கூடத்தில் பிள்ளையை இறக்கிவிட்டு அலுவலகத்துக்குப் போனவர்கள் உடனடியாக திரும்பி வந்து பிள்ளைகளை ஏற்றிக்கொண்டு போய் வீட்டில் விடுவது எப்படி?

இது தொடர்பாக வட மாகாண ஆளுநரின் முகநூல் பக்கத்தில் ஒருவர் கேள்வி கேட்டிருந்தார். பரீட்சை ஒரு பகுதியில் குழம்பியதால் மாகாணம் முழுவதுக்கும் விடுமுறை கொடுக்க வேண்டி வந்தது என்ற தொனிப்படி ஆளுநரின் முகநூலில் ஒரு குறிப்புக் காணப்பட்டது. இது தொடர்பில் ஏன் முன்கூட்டியே சிந்தித்திருக்கவில்லை என்ற தொனிப்பட ஒருவர் கேள்வி கேட்டிருந்தார். திருப்தியான பதில் கிடைக்காத போது மற்றொருவர் அம்முகநூல் கணக்கை இயக்குவது ஆளுநரா அல்லது யாராவது அட்மினா என்றும் கேட்டிருந்தார். ஊடகவியலாளர் ஒருவர் தனது முகநூல் ஆளுநரின் விரைந்து முடிவெடுக்கும் பண்பை விமர்சிக்கும் போது விக்னேஸ்வரனையும் முன்பு விமர்சித்தீர்கள் இப்பொழுது நீங்களும் அதைத்தானே செய்கிறீர்கள் என்று பதிவிட்டிருந்தார்.



காஜா புயலுக்கு அடுத்தநாள் பாடசாலையைத் திறப்பதா இல்லையா என்ற விவகாரத்தில் காணப்பட்ட விரைந்து முடிவெடுக்காப் பண்பானது வடக்கில் அரசியல் தலைமைத்துவ வெற்றிடம் உள்ளது என்பதைக் காட்டியது. அதோடு தமிழ் நிர்வாகிகள் அனர்த்த காலங்களில் எப்படிச் செயற்படுவார்கள் என்பதையும் காட்டியது. எமது கல்வி முறைமை ஆபத்தான தருணங்களில் எப்படிப்பட்ட முடிவுகள் எடுக்கக் கூடும் என்பதையும் காட்டியது. தற்துணிபோடும் முன்யோசனையோடும் முடிவெடுக்கவல்ல அதிகாரிகள் இல்லையா? என்ற கேள்வியும் எழுந்தது.

ஆனால் கிறிஸ்மஸ் தினத்துக்கு முன்பு வன்னியில் பெருகிய வெள்ளம் மேற்படி விமர்சனங்களையும் சேர்த்து அடித்துக்கொண்டு போய் விட்டதா? வெள்ளம் பெருகி சனங்கள் இடம்பெயரத் தொடங்கியவுடன் சமூக வலைத்தளங்களும் கைபேசிச் செயலிகளும் வேகமாகச் செய்திகளைப் பரப்பின. கட்சிகளும் தொண்டு நிறுவனங்களும் அரச கட்டமைப்புக்களும் மதநிறுவனங்களும் பல்கலைக்கழக மாணவர்களும் சில தனிநபர்களும் வேகமாகச் செய்திகளைப் பரப்பி உதவிகளை ஒருங்கிணைத்தார்கள் வெள்ளத்தில் சிக்கிய மக்களுக்கு உடனடியாக உதவிக்கு வந்த தரப்புக்களுள் படைத்தரப்பு முதன்மையானது.

14ஆம் பக்கம் பார்க்க

# தமிழர்களை ஐக்கியப்படுத்திய வன்னி வெள்ளம்

எல்லாக் கட்சிகளும், கட்சித் தலைவர்களும் வெள்ளத்தில் இறங்கியிருக்கிறார்கள். எல்லாக் கட்சித்தொண்டர்களும் பாதிக்கப்பட்ட மக்களை நோக்கி சென்றிருக்கிறார்கள். தமிழ், ஊடக நிறுவனங்கள் போட்டிபோட்டுக் கொண்டு உதவின. அதே சமயம் கொழும்பு மைய ஊடகங்கள் இதுவிடயத்தில் போதியளவு கவனத்தைக் குவிக்கவில்லை என்று ஒரு குற்றச்சாட்டும் எழுந்தது. இயற்கை அனர்த்தங்களின் போது கைபேசிகளும் சமூக வலைத்தளங்களும் எப்படி விரைந்து உதவக் கூடிய வலைப் பின்னலைக் கட்டியெழுப்ப முடியும் என்பதற்கு வன்னி வெள்ளம் ஓர் ஆகப்பிந்திய உதாரணம் ஆகும்.

குறிப்பாகப் படைத்தரப்பு ஆபத்தில் உதவியது. பொதுவாக ஒரு நாட்டில் இயற்கை அழிவுகள், அவசர நிலைகளின் போது முதலில் அரங்கில் இறக்கப்படுவது படைத்தரப்புத்தான். ஏனெனில் மிகவும் ஒழுங்கமைப்புக்கப்பட்ட வினைத்திறன் மிக்க ஒரு கட்டமைப்பு அதுவாகும். வன்னியில் அங்குள்ள சனத்தொகையுடன் ஒப்பிடுகையில் அளவுப்பிரமாணத்துக்கு அதிகமான தொகையில் படைத்தரப்பு நிலைகொண்டுள்ளது.

அதுமட்டுமல்ல அவர்கள் எங்கெங்கெல்லாம் நிலை கொண்டிருக்கிறார்கள் என்பது வன்னியில் உள்ள எந்த ஒரு சிவில்க்கட்டமைப்புக்கும் தெரியாது. வன்னியைப் பொறுத்தவரை வெளிப்படையாகவும் வெளித்தெரியா விதத்தில் ஆழகாட்டிலும் படையினர் நீக்கமற நிறைந்திருக்கின்றார்கள்.

கடந்த வாரத்திற்கு முன்னரும் இரணைமடுக்குளத்தில் வான்கதவுகள் திறக்கப்பட்டமை ஞாபகத்திலிருக்கலாம். மைத்திரிபால சிறிசேனா வந்து அவற்றை வைபவ ரீதியாகத் திறந்து வைத்தார். அவர் மேலதிக நீரைத்திறந்துவிட்டமை தொடர்பில் வேறு ஒரு கதை உண்டு. இரணைமடுக்குளத்தின் நீரேந்து பிரதேசத்திற்கு அண்மையாக படைமுகாம்கள் உண்டு. குளத்து நீரின் வரத்துக் கூடினால் அந்த முகாம்கள் மிதக்கத் தொடங்கி விடும் என்றும் அதனால் படைத்தரப்பே வான்கதவுகளைத் திறக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டதாகவும் ஒரு கதை உண்டு. அப்படியானால் இம்முறை ஊருக்குள் புகுந்த வெள்ளம் முதலில் அந்த முகாம்களுக்குட்தான் புகுந்திருக்க வேண்டும் ஆயின் வான்கதவுகளை முன்கூட்டியே திறக்குமாறு ஏன் படைத்தரப்பு வற்புறுத்தவில்லை?

எதுவாயினும் வன்னியில் உள்ள மிகப்பெரிய ஒழுங்கமைக்கப்பட்ட அரச கட்டமைப்பு என்று பார்த்தால் அது படைத்தரப்புத்தான் அதோடு இயற்கை அனர்த்தங்களின் போதும் விரைவாகச் செயற்படத் தேவையான ஒழுங்கமைப்பையும் பயிற்சியையும் தேவையான உபகரணங்களையும் கொண்டிருப்பதும் படைத்தரப்புத்தான். எனவே வெள்ளம் பெருகத் தொடங்கியதும் அவர்கள் உடனடியாக களத்தில் இறங்கினார்கள்.

அவர்களுக்கு அடுத்தாகக் கட்சிகள் இறங்கின. தமிழ்க் கட்சிகளிடம் படைத்தரப்பிடம் உள்ளது போன்ற நேர்த்தியாக ஒரு மையக கட்டளைப் பீடத்தின் கீழ் ஒருங்கி ணைக்கப்பட்ட மேலிருந்து கீழ் நோக்கிய ஒரு வலைக் கட்டமைப்போ அல்லது கீழிருந்து மேல் நோக்கிய ஒரு வலைக்கட்டமைப்போ கிடையாது. தவிர களத்தில் இறங்கி வேலை செய்த கட்சிகள் நிறுவனங்கள் தனிநபர்களுக்கிடையிலும் வினைத்திறன் மிக்க ஒருங்கிணைப்பு இருக்கவில்லை. இதனால் ஒரு கட்சி அல்லது நிறுவனம் ஒரு பொருளைக் கொடுத்தால் ஏனைய கட்சி வேறு தேவையான ஒரு பொருளைக் கொடுக்கலாம் என்ற ஒரு மையப்படுத்தப்பட்ட நிவாரணத்திட்டம் எதுவும் இருக்கவில்லை. இது எதைக் காட்டுகிறது என்றால் உதவி செய்யும் அமைப்புக்களையும், கட்சிகளையும் தனிநபர்களையும் ஒரு மையத்தில் இணைக்கவல்ல ஏற்பாடுகள் பலவீனமாகக் காணப்பட்டன என்பதைத் தான்.

எனினும் ஓர் அனர்த்த வேளையில் தமிழ்த்தரப்பு ஒற்றுமைப்பட முடியும் என்பதற்கு வன்னி வெள்ளம் ஓர் ஆகப்பிந்திய மகத்தான முன்னுதாரணம் ஆகும். கடந்த நவம்பர் மாதம் மாவீரர் நாளை அனுஷ்டித்த போதும் தமிழ் தரப்பிடம் ஏதோ ஒரு புரிந்துணர்வு பேணப்பட்டது. விஸ்வமடு துயிலுமில்லம் தொடர்பாக வைபரில் சில வாக்குவாதங்கள் நடந்திருந்தாலும் அதுபோன்ற சில சர்சைகளுக்கும் அப்பால் மாவீரர் நாளில் வடகிழக்கில் சம்பந்தப்பட்ட கட்சிகளும் அமைப்புக்களும் பரஸ்பரம் புரிந்துணர்வுடனும் விட்டுக் கொடுப்புடனும் ஒருவர் மற்றவரை அனுசரித்து நடந்து கொண்டதைக் காணக் கூடியதாக இருந்தது. இத்தனைக்கும் நினைவு கூர்தல் தொடர்பாக ஒரு பொது ஏற்பாட்டுக் குழுவை கடந்த 10 ஆண்டுகளாக உருவாக்க முடியாதிருக்கும் ஒரு மக்கள் கூட்டம் இது. எனினும் ஒரு பொது ஏற்பாட்டுக்குழு இல்லாத வெற்றிடத்திலும் ஆளுக்காள் விட்டுக் கொடுத்து மாவீரர் நாளை அனுஷ்டித்தார்கள்.

அதுபோலவே கடந்த கிழமை வெள்ள நிவாரணத்தின் போதும் ஒரு பொதுக்கட்டமைப்பு இல்லையென்ற போதிலும் தமிழ்க்கட்சிகளும், நிறுவனங்களும் தனிநபர்களும் ஏதோ ஒரு புரிந்துணர்வுடன் செயற்பட்டதைக் காணக் கூடியதாக இருந்தது. அதோடு பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவுவதற்காக தன்னார்வமாக அமைப்புக்களும் கட்சிகளும் தனிநபர்களும் முன்வந்து உதவிப் பொருட்களையும் காசையும் திரட்டினார்கள். அதை ஒரு கடமைபோல பலர் செய்தார்கள். உண்மையில் அது ஒரு தேசியக் கடமையும் தான். ஏனெனில் தேசியம் எனப்படுவது ஒரு மக்கள் கூட்டத்தை முற்போக்கான அம்சங்களின் அடிப்படையில் திரளாக்குவதுதான்.




2494 Danforth Ave.
Toronto, ON
M4C 1K9

Let's big up your satisfaction with a mega settlement



We Specialize in Motor Vehicle Accident, Injury.

**Rubin Ariaratnam**
Litigation Advisor

## 416.312.0978

omegalegalfirm@gmail.com

Personal Injury - Traffic - Criminal

---

YOUR DREAMS. YOUR LIFE.
SIMPLIFIED.






- Life Insurance
- Disability Insurance
- Mortgage Insurance
- Super Visa
- Estate Planning
- Group Plans
- R.R.S.P
- Long Term Care
- Segregated Funds

## LIFE & HEALTH INSURANCE ADVISOR






40 Winges Road unit 09
Woodbridge ON L4L 6B2
Tel: 905.265.7393

**Yogarajah Kathirgamar**
Cell: 416.917.7263

---




## விடுமுறை கால விசேட சலுகைகளைப் பெற்றுக்கொள்ள அழையுங்கள்

## 416.908.6845




UNLIMITED
**INTERNET**
TV - HOME PHONE

SMART
HOME
**MONITORING**

தமிழில் உரையாட அழையுங்கள்
**சுந்தர் சின்னத்தம்பி**
Rogers Local Area Advisor
## 416.908.6845
puvanendran.sinnatha@rci.rogers.com

---

# GTA CHIROPRACTIC CENTRE

*We are specialized in,*

- Motor Vehicle Accidents
- Slip & Fall
- WSIB
- Extended Health Care
- Sports Injuries
- Physiotherapy
- Chiropractic
- Orthotics Shoes
- Massage Therapy
- Acupuncture




**Pon. Pathman (Pat)** President
Tel: 416-321-0482 Cell: 416-528-5318
Fax: 416-321-0486
GTA Square Mall 5215 Finch Ave, E#206
Scarborough, ON, M1S 0C2
www.gtachiro.ca E-mail: gtaphysio@gmail.com

# எதிர்க்கட்சித் தலைவர் பதவியில் கண்வைக்கின்றது ஜே.வி.பி.



மக்கள் விடுதலை முன்னணிக்கு எதிர்க் கட்சி தலைவர் பதவியை கொடுத்துப்பாருங்கள் நாங்கள் உரிய கடமையை செய்து காட்டுகின்றோம் என மக்கள் விடுதலை முன்னணியின் பொதுச் செயலாளர் ரில்வின் சில்வா குறிப்பிட்டார்.

நிகழ்கால அரசியல் நடவடிக்கைகள் குறித்து கருத்து தெரிவிக்கும் போதே மேற்கண்டவாறு கூறிய அவர்,

இன்று இந்த நாட்டில் பொறுப்புக் கூறக்கூடிய தலைமைத்துவம் ஒன்று இல்லாது போய்விட்டது. ஜனாதிபதி - பிரதமர் இடையில் முரண்பாடுகள் நிலவுகின்றன. ஜனாதிபதி சொல்வது ஒன்று செய்வது வேறொன்று. பிரதமர் நாட்டின் குற்றவாளிகளை காப்பாற்ற வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் ஆட்சி நடத்தி வருகின்றார்.

பலமான எதிர்க்கட்சி என கூறிக்கொண்டு செயற்படும் எவரும் உறுதியாக இல்லை. அவர்களும் அதிகார மோகத்தில் மாத்திரமே செயற்பட்டு வருகின்றனர். மஹிந்த ராஜபக்ஷ அணியினர் எந்த நேரமும் அவர்களுக்கு ஏதேனும் பதவி கிடைக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்தில் மட்டுமே செயற்பட்டு வருகின்றனர்.

பாராளுமன்றத்தில் சட்ட விரோதமாக பிரதமர் பதவியை கைப்பற்றினர். அது பறிபோனதும் இன்று எதிர்க்கட்சி தலைவர் பதவியை கைப்பற்றி பாரளுமன்றத்தை ஆக்கிரமிக்க முயற்சித்து வருகின்றனர். கடந்த சில பாராளுமன்ற அமர்வுகளின் போதெல்லாம் அவர்கள் எதிர்க்கட்சி ஆசனம் குறித்த நோக்கத்தில் மட்டுமே செயற்பட்டு வந்தனர்.

அதேபோல் தமிழ் தேசிய கூட்டமைப்பு இத்தனை காலம் எதிர்க்கட்சி அதிகாரத்தில் இருந்தது, ஆனால் பிரதான எந்தவொரு பிரச்சினையையும் அவர்கள் கையாளவில்லை. மாறாக வடக்கின் ஒரு சில அரசியல் பிரச்சினைகள் குறித்து மட்டுமே பேசினார்கள்.

ஆனால் மக்கள் விடுதலை முன்னணியின் ஆறு பாராளுமன்ற உறுப்பினர்களும் எதிர்க்கட்சியின் உண்மையாக பொறுப்பினை சரியாக செய்து வருகின்றோம். மக்களின் நேரடியான பிரச்சினைகள் குறித்து மக்கள் விடுதலை முன்னணி மட்டுமே கலந்துரையாடி அரசாங்கத்திற்கு அழுத்தம் கொடுத்து வருகின்றது.

ஆகவே எமக்கு அங்கீகாரம் இல்லாது போனாலும் கூட இன்றும் உண்மையான எதிர்க்கட்சி நாம் தான். மக்கள் எமது கொள்கையை, நிலைப்பாட்டினை ஆதரித்து மக்களின் மூலமாகவே அதிகாரத்தை வழங்கும் வரையில் எமது போராட்டம் ஜனநாயக ரீதியில் முன்னெடுக்கப்படும்.






Christmas; Early Boxing Day, New Year Sale!

Super Deal!
Until
Jan - 02-2019

# வரதாஸ் சில்க்
# Varatha's Silk

# All Item 65% - 80% Off

2019ஆம் ஆண்டின்
New Arrivals
Sarees
Salwars
Fancy Jewellery
70% Off

Men's Wear
Ladies Wear
Boy's Wear
Girl's Wear
65% Off

Gift & Toys
65% off

Fancy Sarees
$30 - $40

New Arrivals Soft Silk Sarees - $699.99 now $200
Kanjipuram Sarees - $899.99 now $270

2 House Coats
2 Saram
2 Shirts
2 Saree Skirts
$9.99

2 Box Shirts
2 Men's Tshirts
$14.99

Art Silk Sarees
$20 - $40

Girl's Lengha $ 40
Half Sarees $ 30 - $ 40
கரம்போட் Big $ 40 / Small $ 30
Rice Cooker 5 Cups - $25 / 8 Cups - $30

Printed Sarees $20 - $ 30
Girl's Salwar $ 10 - $ 20
Ladis Salwar $ 30 - $ 40

Banigles Set $ 4
Necklace $5 - $10

மற்றும் பல...!





$ 200க்கு மேல் கொள்வனவு செய்பவர்களுக்கு GIFT!

பட்டுக்களின் சங்கமம் வரதாஸ் சில்க்

4565 Sheppard Ave. East, McCowan & Sheppard
Tel: 416-291-4144

The new
# 2019 Civic
is here

Bring home a



HONDA




THE NEW
2019 Civic LX
FROM
$66/3.99% APR
WEEKLY LEASE FOR 60 MONTHS
$0 DOWN PAYMENT/OAC
$0 SECURITY DEPOSIT

Honda Sensing™ Technologies standard on most Civic models




2018 CR-V LX AWD
FROM
$78/2.99% APR
WEEKLY LEASE FOR 60 MONTHS
$2,290 DOWN PAYMENT/OAC
$0 SECURITY DEPOSIT



2018 Accord LX
FROM
$76/1.99% APR
WEEKLY LEASE FOR 60 MONTHS
$0 DOWN PAYMENT/OAC
$0 SECURITY DEPOSIT

## IT ISN'T TOO LATE FOR A GREAT DEAL ON A 2018

HondaOntario.com
Ontario Honda Dealers

LEASE PAYMENTS INCLUDE FREIGHT AND PDI. EXCLUDE LICENCE AND HST. AVAILABILITY OF SPECIFIC MODELS WILL VARY. COLOUR AVAILABILITY MAY VARY. DEALER ORDER/TRADE (2018 HONDA MODELS ONLY) MAY BE NECESSARY



HONDA



**Rajah Tharmalingam**
Sales & Leasing
Consultant
Cell:647-833-4998



Formula Honda
*Where You're Treated like Family.*



**Shan Sarvananthan**
Sales & Leasing
Consultant
Cell: 416-720-1184

தமிழில்
English லும்
உரையாடி
சேவைகளைப்
பெற்றுக்கொள்ள
என்னை
அழையுங்கள்

# உங்கள் மூளையையும், இதயத்தையும் மிகப் பத்திரமாக பாதுகாத்துக் கொள்ளுங்கள்






புற்றுநோய், மற்றும் இதய நோய் போன்றவை மட்டுமே உயிரைப் பறிக்கும் நோய்கள் அல்ல. பேச்சு வழக்கில் இரத்த அடைப்பால் ஏற்படும் பக்கவாத நோய் என்றழைக்கப்படும் Strokeகும் பெரிய நோய் தான்.

இன்றைய நவீன உலகில் அதிகம் மரணத்தை ஏற்படுத்தும், பரவாத நோய்களாக மாரடைப்பும், மூளையடைப்பும், Stroke முன்னிலை வகிக்கின்றன. இந்த நோய்களை ஏற்படுத்தும் முக்கிய கார-ணங்களாக அதிகரித்த கொலஸ்ட்ரோல், உயர் இரத்த அழுத்தம், நீரிழிவு என்பன இருப்பதை நீங்கள் அறிவீர்கள்.

இந்தப் பகிர்வு மிக நீளமான பதிவு ஆதலால், அடுத்த வாரமும் இதன் தொடர்ச்சியை எதிர்பாருங்கள்.

ஒவ்வோர் ஆண்டும் உலகம் முழுவதும் சுமார் ஒன்றரைக் கோடிப் பேரை இந்த நோய் முடக்கிப் போட்டு, அவர்களின் வாழ்க்கையை நிர்மூலமாக்கி விடுகிறது!

ஒவ்வோர் ஆண்டும் சுமார் 6 லட்சம் பேர் இந்த நோயால் இந்தியாவில் பாதிக்கப்படுகிறார்கள் என்கிறது ஒரு ஆய்வு. அவர்களில் சுமார் 1.40 லட்சம் பேர் உயிரிழக்கிறார்கள். உலகம் முழுவதும் சுமார் 8 கோடிப் பேர் பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டுள்ளார்கள். 5 கோடிப் பேர் நிரந்தரமாக ஊனமடைந்து வாழ்ந்து வருகிறார்கள். ஒவ்வொரு 6 விநாடிகளுக்கும் புதிதாக பக்கவாத நோயாளி உருவாகுவதாகச் சொல்கிறது உலக சுகாதார நிறுவனம்.

மூளைக்குள் ரத்தம் உறைவது



அல்லது ரத்தம் செல்வது தடைபடுவதால் ஏற்படும் நோய் தான், பக்கவாதம். இதை மூளைத் தாக்கு அல்லது மூளை ரத்த நாளச் சேதம் என்றும் அழைக்கிறார்கள். மற்ற நோய்களைப் போல அல்லாமல் முன் அறிகுறிகள் எதையும் வெளிக் காட்டாமல் திடீரென்று வருவதால் ஆங்கிலத்தில் இதை Stroke என்கிறார்கள்.

பக்கவாத நோய் ஏற்பட இரு காரணங்கள் உள்ளன. ஒன்று, ரத்த ஓட்டம் தடைப்படுவது. இரண்டாவது, ரத்தக் கசிவு ஏற்படுவது. ரத்த ஓட்டத் தடையின் மூலம் ஏற்படும் பக்கவாதத்துக்கு, கொழுப்புப் படிவு தான் முக்கியக் காரணம். அதாவது, ரத்த நாளங்களின் உட்சுவர்களில் கொழுப்பு படியும்போது நாளங்கள் கடினத் தன்மையை அடைந்து விடுகின்றன. இப்படி ரத்த நாளங்கள் கடினமாவதால் அதன் உட்புறப் பாதையின் அளவு குறைகிறது. இதனால் ரத்த ஓட்டத்தில் மாற்றம் ஏற்பட்டு, ரத்தம் உறையலாம். இதனால், பக்கவாதம் ஏற்படலாம்.

இரண்டாவதாக ஏற்படும் பக்கவாதம், மூளையில் ரத்தக் கசிவு ஏற்படுவதால் வருகிறது. இதற்குக் காரணம், உயர் ரத்த அழுத்தம்தான். ரத்த நாளங்களிலிருந்து ரத்தம் கசிந்து வெளியேறி மூளைத் திசுக்களுக்குள் பரவும் போது, திசுக்கள் பாதிக்கப்படும். மூளை நாளங்களில் கசிவு ஏற்பட்ட பகுதிக்கு அருகே உள்ள மூளைத் திசுக்களும் ரத்த ஓட்டத்தை இழந்து பாதிக்கப்படலாம். ஆனால், ரத்தக் கசிவுகளால் ஏற்படும் பக்கவாதத்தை விட, ரத்த ஓட்டத் தடையால் ஏற்படும் பக்கவாதங்களே அதிகம் ஏற்படுகின்றன என்று சொல்லலாம்.

### இதன் அறிகுறிகள் எவை?

முன் அறிகுறிகளை வெளிக் காட்டாமல் இந்த நோய் பாதிப்புக்களை ஏற்படுத்திக் கொண்டாலும், சில அறிகுறிகளை வைத்து எச்சரிக்கையாக இருப்பது மிகவும் நல்லது. காரண மில்லாமல் ஏற்படும் கடும் தலைவலி, திடீரென மங்கும் பார்வை, பார்வை யிழப்பு, ஒரு கண்ணில் மட்டும் ஏற்படும் தெளிவற்ற பார்வை போன்ற அறி குறிகளுடன் காரணமே இல்லாத கிறுகிறுப்பு, தலைச்சூடு, நிலையில்லாமல் தள்ளாடுதல், தடுமாறிச் சாய்தல், திடீரென உடலின் ஒரு பகுதி, முகம், கை, கால்களில் தளர்வு இருப்பது போன்ற உணர்வு, தொடு உணர்ச்சிக் குறைவு, பேசுவதில் சிரமம், பேச்சுத் தடுமாற்றம் போன்ற தொந்தரவுகள் இருந்தால், அவர்களுக்குப் பக்கவாதம் வருவதற்கான சாத்தியம் அதிகம். இந்தத் தொந்தரவுகள் இருப்பவர்கள் உடனடியாக மருத்துவ உதவியை எடுப்பது மிகவும் அவசியம்.

இந்த நோய் ஏற்பட்டால், சிலர் சுய நினைவை இழக்கும் சாத்தியம் உண்டு. அப்படியே உயிர் பிழைத்தாலும் கூட, பார்வைக் குறைவு, பேச முடியாமல் போவது, திக்கிப் பேசுவது, சிந்திக்கும் திறன், அதாவது பழைய நினைவுகளை மறந்து போவது போன்றவை ஏற்படலாம். முகம் அல்லது உடலின் ஒரு பகுதி செயலிழந்து போகலாம். அல்லது நிரந்தரமாகக் கை, கால் செயல்படாமல் போகவும் சாத்தியங்கள் உள்ளன. இது பாதிக்கப்பட்டவருக்கும், குடும்ப உறுப்பினர்களுக்கும் பெரும் நெருக்கடியையும், மன உளைச்சலையும் ஏற்படுத்திவிடும்.

### சிகிச்சைதான் என்ன?

பக்கவாதம் ஏற்படும்போது உடனடியாக சிகிச்சை மேற்கொள்வதன் மூலம், மூளைத் திசுக்கள் பாதிப்படைவதைக் குறைத்துவிடலாம். இதனால் ஏற்படும் ஊனத்தையும் குறைக்கலாம். பக்கவாதம் ஏற்பட்டவர்களில் 50 முதல் 70 சதவீதத்தினர் தாங்களாகவே தங்கள் தேவைகளைக் கவனித்துக்கொள்ளும் நிலைக்கு நிச்சயம் திரும்ப முடியும். ஆனால், 15 முதல் 30 சதவீதத்தினர் படுத்த படுக்கையாகி, நிரந்தரமான ஊன நிலைக்குச் சென்று விடுகிறார்கள். இது நாள் வரை இப்படித் தான் நடைபெற்று வருகிறது.

இவர்களைப் பராமரிப்பதில் மிகுந்த கவனமும் குடும்பத்தினரின் ஆதரவும் மிகவும் தேவை.

குடும்பத்தில் யாருக்காவது இந்த நோய் முன்னர் ஏற்பட்டிருந்தால், குடும்பத்தில மற்றவர்கள் கவனத்துடன் இருக்க வேண்டும். குடும்பப் பாரம்பரியம் காரணமாகவோ மரபணு ரீதியாகவோ இந்த நோய் வருகிறது. வயது அதிகரிக்கும் போது, பக்கவாதத்தால் ஏற்படும் பாதிப்பும் அதிகரித்து விடுகிறது. குடும்ப வரலாறு, மரபியல் காரணங்களை மாற்ற முடியாது. ஆனால், சரியான கவனத்துடன் கூடிய உணவுப்பழக்க வழக்கங்களுடன், அன்றாட வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்வதன் மூலம் சில விஷயங்களை நம்மால் சரி செய்து கொள்ள முடியும்.

ரத்த அழுத்தத்தைச் சீராகப் பராமரிப்பது அவசியம். புகைப்பிடிப்பதால் ரத்தக் கசிவு ஏற்படும் வாய்ப்பு அதிகரிக்கிறது. அதனால், புகைப்பிடிப்பதை நிறுத்த வேண்டும். இதய நாள நோய், நீரிழிவு நோய் ஆகியவை உள்ளவர்களுக்குப் பக்கவாதம் ஏற்படும் சாத்தியங்கள் அதிகம். ரத்தத்தில் சர்க்கரையின் அளவு அதிகரிக்காமல் பார்த்துக் கொள்வது மிகவும் அவசியமாகிறது. அத்துடன் உடலில் கொழுப்புச் சேர்வதைத் தவிர்ப்பது, மூளை, இதயம் என இரண்டுக்கும் மிக நல்லது என்பதை புரிந்து கொள்வீர்கள் என நம்புகிறேன்.

உலகம் தோன்றிய காலம் முதல் வாழ்வும் நடைபெறுகிறது. வாழ்வுடனேயே தோன்றியது தான் இயற்கை வாழ்வும். அது ஒரு வாழ்க்கை முறையே அன்றி வெறும் சிகிச்சை முறையல்ல.

இயற்கை மருத்துவம் என்பது, வாழ்க்கையைப் பற்றிய நம் கருத்தையே மாற்றிக் கொள்ளுவது போலாகும். அதாவது நம் வாழ்க்கையை ஆரோக்கிய விதிகளை அனுசரித்து ஒழுங்குபடுத்திக் கொள்வது என்று பொருள்படும்.

தரமான மூலிகைகளைக் கொண்டு தயாரிப்பது மருந்துக்கான முதல் நிலையாகும்.

அதுவே நீங்கள் ஒரு வைத்தியரை நிர்ணயிக்கும் முன்னர் உங்களை போன்ற நோய்களுக்கு தீர்வு கிடைத்த நோயாளிகள் இருக்கிறார்களா என்கிறதை தெரிந்து கொள்வதும், கூறப்பட்ட பத்தியத்துடன் எடுத்தாலும், குறிப்பிட்ட காலத்தில் எந்த மாற்றமும் தெரிய வில்லை என்றால், உங்களுக்கு நோய் மாறாது இருக்கிறதென்பதை நீங்கள் நிச்சயம் உணர்ந்து கொள்ள வேண்டும். நீங்கள் அதைத் தொடர்வது பற்றி நிச்சயம் கருத்தில் கொள்ளவேண்டும். அதுவும் மிக முக்கியமாக உங்களது ஏமாற்றத்தைத் தடுக்கும் வழிகளில் ஒன்று.

எந்தவிதமான வைத்திய முறையானாலும், நோய் குணமாகியவர்களின் பரிந்துரைகளை கேட்டு, வைத்தியரையோ, வைத்தியமுறையையோ தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள். இதனால் உங்கள் பணவிரயமும், கால விரயமும், மன உளைச்சலும் தவிர்க்கப்படும்.

இதய அடைப்பு மற்றும் பக்கவாதம் வருவதற்குக் காரணமான இரத்த அடைப்பு ஏற்படுத்துவதைத் தடுக்க, முன்னெச்சரிக்கையாக யாவரும் இதை அறிந்து வைத்திருப்பதற்கும் மற்றும் மரபணு நோய்கள் பற்றிய எந்தவித ஆலோசனைகளுக்கும் அழையுங்கள் உங்களுக்கு உதவகாத்திருக்கிறேன்.

மேலும் தொடர்கிறேன்...

Premi.S
Registered Hereditary Siddha Practitioner
(Royal Physicians Treatment)
Alchemist (IND)
Natural Medicine Practitioner(CAN)
Spagyric Alchemist(CAN)
1416 624 7927
1 647 278 3100

# எதிர்க்கட்சித் தலைவர் விவகாரமும் சம்பந்தனின் அணுகுமுறையும்

**யதீந்திரா**

தனிப்பட்ட வாழ்வில் பொய்களை எவரும் கொண்டாடுவதில்லை. அது வெறுக்கத்தக்க ஒரு விடயமாகவே கணிக்கப்படுகிறது. ஆனால் அரசியலில் அப்படியல்ல. பொய்கள் ரசிக்கப்படுகின்றன. பெரும்பாலான சந்தர்ப்பங்களில் கொண்டாடப்படுகின்றன. இன்று உயிர்வாழ்பவர்களில் சர்வதேச உறவுகள் துறையில், குறிப்பிடத்தக்க அறிவாளிகளில் ஒருவரான ஜோன் மியசைமர் எழுதிய தலைவர்கள் ஏன் பொய் சொல்கிறார்கள் (WHY LEADERS LIE - The Truth about Lying in International Politics) - என்னும் நூலை அண்மையில் வாசித்துக் கொண்டிருந்தேன். அமெரிக்க தலைவர்கள் எவ்வாறு தங்களுடைய சொந்த மக்களுக்கும் உலகத்திற்கும் பொய்களை கூறினார்கள், என்பதை ஆதாரபூர்வமாக மியசைமர் அந்த நூலில் விபரித்திருக்கின்றார். இந்த பொய்கள் இரண்டு பிரதான இலக்குகளை கொண்டிருக்கும். ஒன்று சொந்த நலன்களுக்கானது. இரண்டு நாட்டின் நலன்களுக்கானது. அதனை நூலின் ஆசிரியர் மூலோபாய பொய்கள் (Strategic lies) என்கிறார். அந்த பொய்கள் சர்வதேச ராஜதந்திர உறவுகளில் எப்போதுமே தவிர்க்க முடியாதவை. சர்வதேச அரசியலும் பொய்களும் ஒட்டிப்பிறந்த இரட்டையர்கள் போன்றவை. அவை பிரிக்க முடியாதவை.

இந்த நூலை வாசித்துக் கொண்டிருக்கும்போதுதான், எதிர்க்கட்சித் தலைவர் விவாதம் ஊடகங்களில் செய்தியாக எட்டிப்பார்த்தது. ஒரு மூத்த மனிதர், வாழ்வில் சாதிப்பதற்கும் அனுபவிப்பதற்கும் வயதில்லாதவரான இரா. சம்பந்தன், அந்த கதிரையின் மீதுள்ள அடங்காத ஆசையின் காரணமாக எந்தளவிற்கு பொய்களை சொல்பவராக மாறியிருக்கிறார் என்பதை காண முடிந்தது. உண்மையில் அவரது பொய்கள் தமிழ் மக்களின் நலனுக்கானது எனில், அந்த பொய்கள் தொடர்பில் பேச வேண்டிய தேவையில்லை. இந்தப் பத்தியாளருக்கு அதில் முரண்பாடும் இல்லை ஏனெனில் அது மக்களுக்கானது. ஆனால் சம்பந்தன் தனது ஆசைகளுக்காக, தொடர்ந்தும் பொய்களை கூறிவருவதுதான் தவறானது. கடந்த மூன்று வருடங்களாக சம்பந்தன் பொய்களை தவிர எதனையும் கூறவில்லை. எந்தவொரு பொய்யும் மக்களுக்கானதாக இருக்கவில்லை. தமிழ் அரசியல் சூழலில் சொல்லப்பட்டுவரும் பெரும்பாலான அரசியல் பொய்கள் மக்களது நலன்களை முன்னிறுத்தி சொல்லப்படுபவை அல்ல



மாறாக, அரசியல்வாதிகளின் சொந்த அரசியல் நலன்களுக்காகவே அவை சொல்லப்படுகின்றன. இந்தப் பொய்களை தரம்பிரித்து அறியும் ஆற்றல் வளராதவரையில் அந்தப் பொய்கள் மக்களால் ஏதேவொரு வகையில் ரசிக்கப்படலாம். உதாரணமாக தமிழ் சூழலில் சிலர், தங்களுக்கு பிடிக்காதவர்களை உளவுத்துறைகளோடும், ஏனைய நாடுகளோடும் தொடர்புபடுத்தி பிரச்சாரங்களை மேற்கொள்வதும் கூட, சொந்த அரசியல் நலன்களுக்கான பொய்கள்தான்.

1977ஆம் ஆண்டு இடம்பெற்ற பாராளுமன்றத் தேர்தலில், 18 ஆசனங்களை பெற்றதன் மூலம், அன்றைய சூழலில் தமிழ் மக்களுக்கு தலைமை தாங்கிய தமிழர் விடுதலைக் கூட்டணி, நாட்டின் பிரதான எதிர்க்கட்சியாக மாறியது. அப்பாப்பிள்ளை அமிர்தலிங்கம் எதிர்க்கட்சித் தலைவரானார். அதன் பின்னர் 2015இல் இடம்பெற்ற பாராளுமன்றத் தேர்தலில் 16 ஆசனங்களை பெற்றதன் மூலம், தமிழ் தேசியக் கூட்டமைப்பிற்கு அவ்வாறானதொரு வாய்ப்பு கிடைத்து. இங்கு கவனிக்க வேண்டிய விடயம். 2015இல் சிறிலங்கா சுதந்திரக் கட்சியும் ஐக்கிய தேசியக் கட்சியும் ஒரு கூட்டரசாங்கத்திற்கான உடன்பாட்டை செய்து கொண்டதன் பின்னணியில்தான், கூட்டமைப்பு பிரதான எதிர்க்கட்சியாக வரமுடிந்தது. அந்த அடிப்படையில் சம்பந்தன் எதிர்க்கட்சித் தலைவரானார். தமிழர் ஒருவர் எதிர்க்கட்சித் தலைவரான இரண்டு சந்தர்ப்பங்களிலும் தமிழர் தரப்பு, ஒரு தனிக்கட்சியாக பாராளுமன்றம் சென்றிருக்கவில்லை என்பதையும் இங்கு கவனிக்க வேண்டும். முதலில் தமிழர் விடுதலைக் கூட்டணி, பின்னர் தமிழ் தேசியக் கூட்டமைப்பு. ஆனால் அமிர்தலிங்கம் எதிர்க்கட்சித் தலைவராக பதவிவகித்த காலமும், சம்பந்தன் பதவிவகித்த காலமும் ஒன்றல்ல. இரண்டுக்கும் அடிப்படையிலேயே வேறுபாடுண்டு.

சம்பந்தன், இந்த பதவியை பொறுப்பேற்ற போது, அது தொடர்பில் சில விமர்சனங்களும் முன்வைக்கப்பட்டன. இன்றைய சூழலில் சம்பந்தன் இந்தப் பொறுப்பை தவிர்ப்பதே நல்லது என்றவாறும் கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. அதற்கு மாறாக, இந்தக் பதவியைக் கொண்டும் தமிழ் மக்களுக்கு நன்மை செய்ய முடியுமெனின் அதனை ஏற்றுக்கொள்வதில் தவறில்லை என்றவாறும் கருத்துக்கள் முன்வைக்கப்பட்டன. ஆனால் கடந்த மூன்றுவருட காலமாக, ஒரு எதிர்க்கட்சித் தலைவர் என்னும் வகையில் சம்பந்தன் என்ன செய்தார் என்று ஒரு கேள்வியை கேட்டால், அவர் ஏன் இந்தப் பதவியை எடுத்தார் என்பதற்கான பதில் கிடைக்கும். அந்தளவிற்கு எதிர்க்கட்சித் தலைவர் என்னும் கதிரையை தன்னுடைய சொந்த அதிகார ஆசைகளுக்காகவே சம்பந்தன் பயன்படுத்தியிருந்தார். ஆகக் குறைந்தது ஒரு நல்ல எதிர்க்கட்சித் தலைவராகக் கூட அவரால் செயற்பட முடியவில்லை. அவ்வாறானதொரு பதவியை தக்கவைப்பதற்காகத்தான், இன்று சொந்த மக்களுக்கு புதிய கதைகள் சொல்லப்படுகின்றன. ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன, அமைச்சரவையில் இடம்பெறுவதால், எதிர்க்கட்சித் தலைவர் பதவி கூட்டமைப்புக்குரியது என்றவாறு சுமந்திரன் ஒரு புதிய விளக்கமளிக்கின்றார். அவ்வாறாயின், ஏன், சந்திரிக்கா குமாரதுங்க காலத்தில், எதிர்க்கட்சியை கூட்டமைப்பு கோரவில்லை? அப்போதும் பாராளுமன்றத்தில் இப்போது உள்ளது போன்றதொரு நிலைமைதானே காணப்பட்டது! தமிழ் மக்களுக்கு எந்தவொரு நன்மையும் இல்லாத இந்தப் பதவிக்காக ஏன் அடிபட வேண்டும்? ஆகக் குறைந்தது இந்தக் கேள்விக்காவது பதில் இருக்கிறதா?

இன்று மகிந்த ராஜபக்சதான் நாட்டின் எதிர்க்கட்சித் தலைவர் என்று உத்தியோகபூர்வமாக அறிவிக்கப்பட்ட பின்னரும் கூட, எதிர்க்கட்சி அலுவலகத்தைவிட்டு சம்பந்தன் இதுவரை வெளியேறவில்லை. ஜனநாயகம் என்று நோக்கினால் கூட, பாராளுமன்றத்தில் இரண்டாவது நிலையிலிருக்கும் மகிந்த தரப்பிடம்தானே எதிர்க்கட்சித் தலைவர் பதவி செல்ல வேண்டும். கடந்த இரண்டு மாதங்களாக ஜனநாயகத்தை பாதுகாப்பதற்காகவே தாம் ரணில்விக்கிரமசிங்கவிற்கு ஆதரவாக செயற்பட்டுவந்ததாக சம்பந்தன் கூறிவந்தார். இன்று அந்த ரணிலும் இணைந்துதானே மகிந்தவை எதிர்க்கட்சித் தலைவராக அறிவிக்க உடன்பட்டிருக்கிறார். ஜனநாயகம் தெரிந்த ரணில் எவ்வாறு தவறான முடிவை எடுத்திருப்பார்? ஜனநாயகத்தை பாதுகாப்பதற்காக துணைநின்ற ஒரு சபாநாயகர் எவ்வாறு தவறான முடிவை எடுத்திருப்பார்? இவ்வாறான கேள்விகளுக்கு சம்பந்தன் - சுமந்திரன் தரப்பின் பதில் என்ன? ஒரு வேளை அவர்கள் இப்போது ஜனநாயக விரோதமாக செயற்பட்டிருக்கின்றார்கள், என்று சம்பந்தன்- சுமந்திரன் தரப்பு, கூற முற்பட்டால், கடந்த இரண்டு மாதங்களாக ஜனநாயகத்தை பாதுகாப்பதற்காக நீங்கள் துணைநின்றதாக கூறுவதில் என்ன உண்மையிருக்க முடியும்?

எதிர்க்கட்சி விவகாரத்தில் சம்பந்தன் தவறான முடிவில் பயணிக்கின்றார் என்னும் அபிப்பிராயம், கூட்டமைப்பின் பங்காளிக் கட்சிகள் மத்தியில் மட்டுமல்ல, பெரும்பாலான தமிழரசு கட்சி நாடாளுமன்ற உறுப்பினர்கள் மத்தியிலும் உண்டு. அவர்கள் இந்தப் பத்தியாளரிடம் பேசுகின்ற போது, தங்களது அதிருப்திகளை பகிர்ந்து கொண்டனர். இது தொடர்பில் கூட்டமைப்பின் பங்காளிக் கட்சியான டெலோவின் செயலாளரும் மூத்த அரசியல் வாதிகளில் ஒருவருமான சிறிகாந்தா, இந்தப் பத்தியாளரிடம் பேசுகின்ற போது, தனது அதிருப்தியை மிகவும் வெளிப்படையாகவே பகிர்ந்துகொண்டார். இந்த நாட்டுக்குள் ஒரு அரசியல் தீர்வை பெறுவதுதான் கூட்டமைப்பின் இலக்கு என்றால், தேவையில்லாமல் மகிந்த ராஜபக்சவை சீண்டும் வகையில் செயற்படு சரியான ஒன்றல்ல. பிரதமர் விடயத்தில் நாங்கள் ஒன்றாக நின்றோம் அதில் ஒரு நியாயம் இருந்தது. ஆனால் எதிர்க்கட்சி விவகாரம் அப்படியல்ல. இதில் ஜனநாயம் மகிந்த தரப் பின் பக்கம்தான் இருக்கிறது. மகிந்தவை இறுக்க வேண்டிய இடத்தில் நாங்கள் இறுக்கத்தான் வேண்டும். அதனை நாங்கள் கைவிடப்போவதில்லை ஆனால் தேவையற்ற வகையில் நாம் செயற்படுவது தவறானது. எனவே சம்பந்தன், எதிர்க்கட்சி விடயத்தில் இவ்வாறு முட்டுப்பட்டுக் கொண்டிருப்பது சரியானதல்ல என்பதே தங்களின் நிலைப்பாடு என்றார்.

அரசியல் முடிவுகளில் தனிமனிதர்களின் விருப்பு வெறுப்புகளுக்கும் ஒரு கணிசமான பங்குண்டு. நமது தமிழ்நிலை அரசியல் ஆய்வுகளில் இந்த விடயம் பெரியளவில் கவனத்தில் கொள்ளப்படுவதில்லை. எதிர்க்கட்சி விடயத்தில் சம்பந்தனை வழிநடத்துவது அவரது தனிப்பட்ட ஆர்வங்கள்தான். அதாவது அவரது சொந்த நலன்கள். சம்பந்தன் எப்போதுமே தனது பதவிநிலை அந்தஸ்து, அதிகாரம் என்பவற்றில் கண்ணும் கருத்துமான ஒருவர். அதற்காக எவருடனும் சமரசம் செய்துகொள்ளக் கூடிய ஒருவர். அந்த அடிப்படையில்தான் அமிர்தலிங்கத்திற்கு பின்னர் எதிர்க்கட்சித் தலைவர் பதவியில் அமரும் வாய்ப்பு அவருக்கு கிடைத்தது. ஆனால் திடீர் அரசியல் குழப்பநிலையின் காரணமாக, அந்தப் பதவியில் தொடர்ந்தும் நீடிக்க முடியாமல் போனதை சம்பந்தனால் சகித்துக்கொள்ள முடியவில்லை. பதவி மோகமும், அதனால் ஏற்பட்ட தடுமாற்றமும்தான் அவரை அலைக்கழிக்கிறது. ஆனால் ஒரு எதிர்கட்சித் தலைவராக தன்னால் என்ன செய்ய முடிந்தது என்னும் கேள்வியை ஆகக் குறைந்தது அவருக்குள்ளாவது, அவர் கேட்பாராக இருந்தால், அந்தக் கதிரைக்காக இந்தளவு இறங்கிப் போவது தொடர்பில், தன்னை எண்ணி, அவருக்கே ஒரு அருவருப்பு ஏற்படலாம். ஆனால் அதிகார போதையில் தன்னை மறந்திருக்கும் மனிதர்கள் தங்களை நோக்கி சிந்திப்பார்களென்று எவ்வாறு எதிர்பார்க்க முடியும்.

# "இரக்கம் பார்க்காதீங்க சுட்டுத் தள்ளுங்க, பிரச்சினை வராது"

### கர்நாடக முதல்வர் எச்.டி. குமாரசாமி பேச்சால் சர்ச்சை

மதச்சார்பற்ற ஜனதா தளம் கட்சியின் உள்ளூர் பிரமுகர் ஒருவரை ஒரு கும்பல் கொலை செய்துவிட்டதை அறிந்த கர்நாடக முதல்வர் எச்.டி.குமாரசாமி, "இரக்க மில்லாமல் சுட்டுத்தள்ளுங்கள், பிரச்சினை வராது" என்று செல்போனில் பேசிய காட்சி வெளியாகி சர்ச்சையை ஏற்படுத்தியுள்ளது.




மாண்டியா மாவட்டத்தைச் சேர்ந்தவரும், மதச்சார்பற்ற ஜனதா தளம் கட்சியைச் சேர்ந்த முக்கியப் பிரமுகருமான பிரகாஷ் என்பவரை நேற்று முன்தினம் மைசூரு சாலையில் காரின் சென்ற போது, ஒரு கும்பல் அவரை மறித்து வெட்டிக் கொலை செய்தது. இதனால் மைசூரு சாலையிலும், திண்டுக்கல் பெங்களூரு சாலை யிலும் மதச்சார்பற்ற ஜனதா தளம் கட்சியைச் சேர்ந்த தொண்டர்கள் நேற்று மாலை மறியல் செய்ததால் போக்குவரத்து கடுமையாகப் பாதிக்கப்பட்டது.

இந்நிலையில், இந்த கொலைச் சம்பவம் குறித்து முதல்வர் எச்.டி.குமார சாமி யிடம் சிலர் செல்போனில் கொலை நடந்த சிறிது நேரத்தில் தகவல் தெரிவித்தனர். அப்போது, அவர் செல்போனில் பேசியதை ஊடகத்தினர் பதிவு செய்துள்ளனர். குமாரசாமி பேசுகையில், பிரகாஷ் மிகவும் நல்லவர். எதற்காக அவரைக் கொலை செய்தார்கள் எனத் தெரியவில்லை. பிரகாஷை கொலை செய்தவர்களை ஈவுஇரக்கமில்லாமல் சுட்டுக்கொன்றுவிடுங்கள். பிரச்சினை ஒன்றும் வராது என்று பேசினார்.

முதல்வர் எச்.டி. குமாரசாமியின் பேச்சு குறித்த இந்த வீடியோ சமூக ஊடகங்களில் வெளியாகி பெரும் பரபரப்பாகியது. இது குறித்து கருத்து தெரிவித்த பாஜக, மாநிலத்தில் குமாரசாமி சர்வாதிகார ஆட்சி நடத்துகிறார் என்று விமர்சித்தது.

பாஜக எம்.பி. சோபா கரண்ட்ராஜே கூறுகையில், முதல்வர் குமாரசாமியின் உத்தரவு சர்வாதிகாரித்தனம், சட்டத்துக்கு விரோதமாகச் சுட்டுத்தள்ள உத்தரவிட்டது கேமிராவில் பதிவாகியுள்ளது. வெளிப்படையாக அவர் வன்முறையைத் தூண்டுகிறார். குமாரசாமியின் இந்த சர்வாதிகாரத்தனத்தையும், அட்டூழியத்தையும் கண்டிக்கூடியதாகும் எனத் தெரிவித்தார்.

இந்நிலையில், செல்போனில் பேசியது குறித்து முதல்வர் குமாரசாமியிடம் நிருபர்கள் கேள்வி எழுப்பினார்கள். அப்போது, தான் யாரையும் சுட்டுக்கொல்லச் சொல்லவில்லை என்று தெரிவித்து தன்மீதான குற்றச்சாட்டை மறுத்தார்.

அவர் கூறுகையில், உணர்ச்சிவசப்பட்டு அவ்வாறு வார்த்தைகள் வந்துவிட்டது. பிரகாஷை கொலை செய்தவர்களைக் கொல்லுங்கள் என்று நான் உத்தரவிட வில்லை. அந்த நேரத்தில் உணர்ச்சிவசப்பட்டு வார்த்தை வந்துவிட்டது. பிரகாஷை கொலை செய்தவர்களில் இருவர் சிறையில் இருந்தார்கள். கடந்த இரு நாட்களுக்கு முன்தான் ஜாமினில் வெளியே வந்தார்கள். வெளியே வந்தவுடன் பிரகாஷை கொலை செய்துள்ளார்கள். நீதிமன்ற ஜாமினை தவறாகப் பயன்படுத்துகிறார்கள் எனத் தெரிவித்தார்.

ஒரு மாநில முதல்வர் வெளிப்படையாக ஒருவரைச் சுட்டுத்தள்ளுங்கள், பிரச்சினையை பார்த்துக்கொள்ளலாம் என்று பேசிய வீடியோ சமூக ஊடகங்களில் பெரும் வைரலாகி வருகிறது.

# 234 தொகுதிகளுக்கும் பொறுப்பாளர்கள்:

### கமல் அறிவிப்பு



மக்கள் நீதி மய்யம் கட்சிக்கு 234 சட்டமன்றத் தொகுதிகளுக்கு பொறுப்பாளர்களை அறிவித்துள்ளார் அக்கட்சியின் தலைவர் கமல்ஹாசன்.

மக்கள் நீதி மய்யம் கட்சியைத் தொடங்கிய நடிகர் கமல்ஹாசன், கட்சியை பலப்படுத்தும் பணிகளில் தொடர்ந்து ஈடுபட்டுவருகிறார். அண்மையில் நடந்துமுடிந்த செயற்குழுக் கூட்டத்தின் முடிவில் கூட்டணி அமைத்து மக்களவைத் தேர்தலை சந்திப்போம் என்றும், தேர்தலில் போட்டியிடுவேன் என்றும் கமல்ஹாசன் அறிவித்தார். மேலும், பல்வேறு துறைகளின் ஆலோசனைகள் அவசியம் என கருதிய கமல்ஹாசன், துறை சார்ந்த நிபுணர்களையும் கட்சியில் இணைத்துவருகிறார்.

இந்த நிலையில் கட்சியின் அடுத்த கட்ட நகர்வாக 234 சட்டமன்ற தொகுதிகளுக்கும், கமல்ஹாசன் ஒப்புதலுடன் 575 க்கும் மேற்பட்ட தொகுதி பொறுப்பாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இதுதொடர்பாக கமல்ஹாசன் வெளியிட்டுள்ள அறிக்கையில், மக்களுக்கான அரசியல், மக்களுக்கான கட்சி என்ற தெளிவுரையுடன், தமிழகத்தின் வளர்ச்சிக்காகவும், தமிழர்களின் ஏற்றத்திற்காகவும் மக்கள் நீதி மய்யம் தொடர்ந்து பணியாற்றிவருகிறது. புதிய மாற்றத்தினை முன்னிறுத்தி தெளிவாகவும் நேர்மையாகவும் தொலைநோக்கு பார்வையுடனும் ஒவ்வொரு நகர் விலும் தமிழர்களின் பெரும் நம்பிக்கையாக வலுப்பெற்றுவருகிறோம். அந்த வகையில் அனைத்து சட்டமன்ற தொகுதிகளுக்கு பொறுப்பாளர்களை அறிவித்துள்ளோம் என்று தெரிவித்துள்ளார்.

வழங்கப்படுவது பதவியல்ல, பொறுப்பு என்று பொறுப்பாளர்கள் அனைவருக்கும் பல முறை பல தருணங்களில் கூறியிருக்கிறேன். எனவே அதனை நினைவில் நிறுத்தி கட்சியின் விழியாகவும் செவியாகவும் குரலாகவும் செயல்பட வேண்டும் என்று நிர்வாகிகளுக்கு வலியுறுத்தியுள்ள கமல்ஹாசன், பொறுப்பினை சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு பயன்படுத்தாமல் மக்களின் தொண்டர்களாக, மக்கள் நலனை முன்னெடுப்பதற்காக பயன்படுத்த வேண்டும் என்றும் கூறியுள்ளார்.

வரும் மக்களவைத் தேர்தலில் போட்டியிடுவதற்கு ஏதுவாக கட்சிக்கு பொறுப்பாளர்களை நியமித்துள்ளார் கமல்ஹாசன்.

# திமுக - காங். கூட்டணியை வீழ்த்த பாஜக வியூகம் அதிமுக, பாமக, தேமுதிகவை இணைத்து கூட்டணி?

திமுக - காங்கிரஸ் கூட்டணியை வீழ்த்த அதிமுக, பாமக, தேமுதிகவை இணைத்து மெகா கூட்டணி அமைக்கப் பாஜக முயற்சித்து வருவதாகக் கூறப்படுகிறது.

வரும் ஏப்ரல் - மே மாதங் களில் மக்களவைத் தேர்தல் நடைபெறவுள்ளது. வரும் மார்ச் முதல் வாரத்தில் தேர்தல் அட்டவணை வெளியாகவுள்ளது. அதற்கு இன்னும் 2 மாதங்களே இருக்கும் நிலையில் முக்கிய அரசியல் கட்சிகள் கூட்டணி அமைப்பது, தொகுதி பங்கீடு என தேர்தல் பணிகளில் தீவிரம் காட்டி வருகின்றன. தமிழகத்தைப் பொறுத்தவரை திமுக தலைமை யில் காங்கிரஸ், மதிமுக, மார்க் சிஸ்ட், இந்திய கம்யூனிஸ்ட், விடு தலைச் சிறுத்தைகள் கட்சி, இந்திய யூனியன் முஸ்லிம் லீக், மனிதநேய மக்கள் கட்சி ஆகியவை இணைந்துள்ளன. காங்கிரஸ் தலைவர் ராகுல் காந்தியை பிரதமர் வேட்பாளராக திமுக தலைவர் மு.க.ஸ்டாலின் முன்மொழிந்துள்ளார். இதன்மூலம் திமுக - காங்கிரஸ் கூட்டணி உறுதி யாகியுள்ளது. அதிமுக பிளவுபட்டி ருப்பதாலும், ஜெயலலிதாவுக்கு இணையான வலிமையான தலைமை இல்லாததாலும் திமுக - காங்கிரஸ் கூட்டணி வலிமையான தாகப் பார்க்கப்படுகிறது.

கடந்த 2014 தேர்தலில் 282 தொகுதிகளில் வென்று தனித்து ஆட்சியமைத்த பாஜக, இந்த தேர் தலை எதிர்கொள்ள தயாராகி வருகிறது. ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், சத்தீஸ்கரில் கிடைத்த தோல்வி பாஜகவுக்கு பின்ன டைவை ஏற்படுத்தியுள்ளது. இருப் பினும், பிஹாரில் ஐக்கிய ஜனதா தளம், ராம்விலாஸ் பாஸ்வானின் லோக் ஜனசக்தி கட்சிகளுடன் தொகுதி உடன்பாட்டை பாஜக முடித்துள்ளது. பாஜகவைப் பொறுத்தவரை தங்கள் கட்சிக்கு எத்தனை இடங்கள் கிடைக்கிறது என்பதைவிட காங்கிரஸ் அதிக இடங்களில் வென்றுவிடக் கூடாது என்பதில் கவனம் செலுத்தி வருவதாகக் கூறப்படுகிறது.

இதுதொடர்பாக பாஜக மூத்த தலைவர் ஒருவரிடம் கேட்டபோது, 2014 போல தனிப்பெரும்பான்மை கிடைக்காவிட்டாலும் தனிப்பெரும் கட்சியாக பாஜக வரும் என்ற நம்பிக்கையில் இருக்கிறோம். 250-க்கும் குறைவான தொகுதிகளைப் பெற்றால் எங்களால் ஆட்சி அமைக்க முடியாத நிலை ஏற்படும். எனவே, காங்கிரஸ் கட்சிக்கு எந்த அளவுக்கு இடங்கள் குறை கிறதோ, அந்த அளவுக்கு பாஜக ஆட்சி அமைக்கும் வாய்ப்பு அதிக ரிக்கும். எனவே, அதற்கேற்ப வியூகங்களை மோடியும், அமித் ஷாவும் வகுத்து வருகின்றனர்" என்றார்.

காங்கிரஸின் வெற்றியை பாஜகவால் தடுக்க முடியுமா? என்று அவரிடம் கேட்டபோது, "அரசியலில் சாத்தியமில்லாதது என்று எதுவும் இல்லை. அதிக எம்.பி. இடங்களைக் கொண்ட உத்தரப்பிரதேசம் (80), மகாராஷ் டிரம் (48), மேற்கு வங்கம் (42), பிஹார் (40), தமிழகம் (39) ஆகிய மாநிலங்களில் கூட்டணி இல்லாமல் காங்கிரஸால் வெல்ல முடியாது. இதில் மகாராஷ்டிரம், தமிழகத்தில் காங்கிரஸ் கூட்டணி அமைத்துள்ளது. மகாராஷ்டிரத்தில் பாஜகவுக்கு கூட்டணி உள்ளது. ஆனால், தமிழகத்தைப் பொறுத்த வரை திமுக - காங்கிரஸ் கூட்டணியை வீழ்த்த எங்களால் முடி யாது. எனவே, அதிமுகவை இணைத்து பாமக, தேமுதிக போன்ற கட்சிகளுடன் மெகா கூட்டணியை அமைக்க மோடியும், அமித்ஷாவும் முயற்சித்து வருகின்றனர் என்றார்.

அதிமுகவை இணைக்க பாஜக முயற்சித்து வருவதாக செய்திகள் வந்து கொண்டிருந்தாலும் அதனை பாஜக தரப்பிலும், அதிமுக தரப்பிலும் யாரும் மறுக்கவில்லை. அதேநேரத்தில் அதிமுக இணைப் புக்கு வாய்ப்பில்லை என அமமுக துணைப்பொதுச்செயலாளர் டிடிவி தினகரன் தெரிவித்துள்ளார். ஆனாலும், இணைப்புக்கான பேச்சுகள் திரைமறைவில் நடந்து வருவதாக அதிமுக, பாஜக, அமமுக வட்டாரங்கள் தெரிவிக்கின் றன. டிடிவி தினகரன் தனித்து போட்டியிட்டால் திமுக எளிதாக வென்றுவிடும் என்பதை முதல்வர் பழனிசாமி உணர்ந்துள்ளதால் அவரும் இணைப்பை விரும்புவ தாகக் கூறப்படுகிறது.

அதேநேரத்தில் பாஜகவுடன் கூட்டணி வைக்க அதிமுக விரும்ப வில்லை என்றும், அப்படி வைத்தால் 15 சதவீத சிறுபான்மையினரின் வாக்குகள் திமுக அணிக்குச் சென்று விடும் என்று முதல் வர் பழனிசாமி அச்சம் தெரிவித் துள்ளதாக அக்கட்சியினர் தெரி விக்கின்றனர். அதிமுகவுடன் கூட்டணி ஏற்படாவிட்டாலும், திமுக - காங்கிரஸ் கூட்டணியை வீழ்த்த அதிமுகவை இணைத்து பாமக, தேமுதிக உள்ளிட்ட கட்சிகளுடன் மெகா கூட்டணியை உருவாக்க பாஜக முயற்சித்து வருவதாக அக்கட்சியினர் தெரிவிக்கின்றனர். இது தெரிந்துதான் பாஜகவையும், பிரதமரையும் திமுக தலைவர் ஸ்டாலின் கடுமையாக விமர்சித்து வருவதாகக் கூறப்படுகிறது.

# இந்தோனேசியாவில் சுனாமி தாக்குதல் பலி எண்ணிக்கை 429 ஆக உயர்வு

இந்தோனேசியாவில் உள்ள சுமத்ரா,ஜாவீ தீவுப்பகுதியில் உள்ள சுந்தா ஜலசந்தியில் ஏற்பட்ட சுனாமி அலையில் சிக்கி பலியானவர்கள் எண்ணிக்கை 429 ஆக உயர்ந்துள்ளது. மீட்பு பணிகள் இன்னமும் முடிவடையாத நிலையில் கடும் துயரத்துக்கு மக்கள் ஆளாகியுள்ளனர்.

இந்திய பெருக்கடலில் ஜாவா கடற்கரையில், சுந்தா ஜலசந்தியில் உள்ள அனாக் கிராகாட்டு எரிமலை 305 மீட்டர் உயரம் கொண்டது. இந்த எரிமலையில் உள்ள சைல்டு எனும் சிறிய எரிமலை வெடித்துச் சிதறி, எரிமலைக்குழம்புகளை வெளியேற்றத் தொடங்கியது. கடந்த ஜூன் மாதத்தில் இருந்து குமுறிக்கொண்டே இருந்த எரிமலை தற்போது வெடித்துள்ளது.

அனாக் கிராகட்டு பகுதியில் உள்ள சைல்டு எரிமலை வெடித்ததன் காரணமாகவும், கடலுக்கு அடியில் நிலச்சரிவு ஏற்பட்டதாலும், சுமத்ரா, ஜாவா கடற்கரைப்பகுதியில் சுனாமி அலைகள் ஏற்பட்டன.

இந்த சுனாமி அலை தாக்கியதால், கரிட்டா கடற்கரைப் பகுதி பலத்த சேதமடைந்துள்ளது. பலியானோர் எண்ணிக்கை 429 ஆக அதிகரித்துள்ளது. ஏராளமானோரைக் இன்னமும் காணவில்லை, ஆயிரத்துக்கும் மேற்பட்டோர் காயமடைந்துள்ளனர். வீடுகளை இழந்தவர்கள் அரசு அலுவலகங்களில்பாதுகாப்பாக தங்க வைக்கப்பட்டுள்ளனர். மீட்பு பணிகள் இன்னமும் நிறைவடையாததால் மக்கள் தவித்து வருகின்றனர்.





# "வெள்ளை மாளிகையில் தனிமையில் இருக்கிறேன்"

## ட்ரம்ப் கவலை: "ஷட்டவுன்" நீடிப்பு

அமெரிக்காவில் ஷட்டவுன் மூன்றாவது நாளாக நீடித்து வரும் நிலையில், வெள்ளை மாளிகையில் தனியாக இருக்கிறேன் என்று அதிபர் டொனால்ட் ட்ரம்ப் தெரிவித்துள்ளார்.

அமெரிக்க- மெக்சிகோ எல்லையில் அகதிகள் நுழைவதைத் தடுக்கும் வகையிலும், அமெரிக்க உள்நாட்டுப்பாதுகாப்புக்கு வழி செய்யும் வகையிலும் சுவர் எழுப்ப அதிபர் ட்ரம்ப் திட்டமிட்டார். இதற்காக 500 கோடி டாலர் நிதி ஒதுக்கக் கோரினார்.

ஆனால், அமெரிக்க நாடாளுமன்றத்தின் இரு அவைகளையிலும் அதிபர் ட்ரம்பின் கோரிக்கைக்கு ஜனநாயகக் கட்சியின் எம்.பி.க்கள் செவிசாய்க்கவில்லை. அதற்கு ஒத்துழைக்க மறுத்துவிட்டனர். இதனால், இந்த நிதியாண்டுக்குச் செலவினத்துக்கான நிதி மசோதாவுக்கு ஒப்புதல் அளித்த இரு அவைகளிலும் இருந்த ஜன நாயகக்கட்சியினர் மறுத்துவிட்டனர்.

இதனால் அமெரிக்காவில் ஷட்டவுன் தொடங்கியது, தொடர்ந்து 3ஆவது நாளை எட்டியுள்ளது. கிறிஸ்துமஸ் பண்டியையொட்டி ஷட்டவுன் தொடங்கியதால், 8 லட்சத்துக்கும் மேற்பட்ட ஊழியர்கள் ஊதியமின்றி பணியாற்ற வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டனர்.

இந்த ஷட்டவுனை முடிவுக்குக் கொண்டுவர அதிபர் ட்ரம்ப் முயன்று வருகிறார். கிறிஸ்துமஸ் விடுமுறைக்காக புளோரிடாவில் உள்ள மாரா ஏ லாகோ விடுதிக்குச் செல்வதைக் கூட அதிபர் ட்ரம்ப் ரத்து செய்து ஜனநாயகக் கட்சியினருடன் பேச்சு நடத்த ஆவலுடன் உள்ளார். ஆனால், ஜனநாயகக் கட்சி எம்.பி.க்கள் குடும்பத்தினருடன் கிறிஸ்துமஸ் விழாவைக் கொண்டாடி வருகின்றனர்.

இது குறித்து அதிபர் ட்ரம்ப் வெளியிட்ட ட்விட்டில், நான் அமெரிக்க ஷட்டவுனை முடிவுக்குக் கொண்டுவர கடினமாக உழைத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், ஜனநாயக கட்சி எம்.பி.க்கள் அவர்கள் வீட்டில் கிறிஸ்துமஸ் கொண்டாடி வருகின்றனர். நான் வெள்ளை மாளிகையில் ஏழையைப் போல் தனியாக இருக்கிறேன். ஜன நாயகக் கட்சியினர் என்னுடன் வந்து பேச்சு நடத்துவார்கள் என காத்திருக்கிறேன். அமெரிக்க, மெக்சிகோ எல்லையில் பாதுகாப்புக்காக சுவர் அவசியம். ஆனால், அதிகமாகச் செலவாகும் என்று ஜனநாயகக்கட்சியினர் கூறுவது வேடிக்கையாக இருக்கிறது.

நான் ஒவல் அலுவலகத்தில் அமர்ந்து நாட்டின் பாதுகாப்பு தொடர்பாகப் பணியாற்றி வருகிறேன். ஏற்கனவே நாம் ஏராளமான மைல்களுக்கு சுவரை எழுப்பிவிட்டோம், சில இடங்களில் முடிந்துவிட்டது. ஆதலால், செலவினநிதிக்கும் ஒப்புதல் அளித்து ஜனநாயகக்கட்சியினர் ஷட்டவுனை முடிவுக்குக் கொண்டுவர வேண்டும் எனத் தெரிவித்துள்ளார்.

மேலும், தான் அலுவலகத்தில் அமர்ந்து பணியாற்றும் வகையில் புகைப்படத்தையும் ட்விட்டரில் அதிபர் ட்ரம்ப் பகிர்ந்துள்ளார். அதில், விரைவில் வடகொரியா அதிபர் கிம்முடன் நடைபெறவுள்ள சந்திப்புக்கு தயாராகி வருகிறேன் என்று ட்ரம்ப் குறிப்பிட்டுள்ளார்.

இதனிடையே 63 ஆண்டு பாரம்பரியமான சான்டாவை (கிறிஸ்துமஸ் தாத்தா) கண்டுபிடிக்கக் குழந்தைகளுக்கு உதவும் நிகழ்ச்சியில் அதிபர் ட்ரம்ப் கலந்து கொண்டு குழந்தைகளுக்கு கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கூறி உதவினார். இந்த நிகழ்ச்சியில் மெலனியா டிரம்பும் கலந்து கொண்டு குழந்தைகளுடன் தொலைபேசியில் உரையாடினார்.

### சுருவில் மக்கள் ஒன்றியம் நடாத்தும் குளிர்கால ஒன்றுகூடலும் நத்தார் இராப்போசன விருந்தும் -2018

சுருவில் மக்கள் ஒன்றியம் நடாத்தும் குளிர்கால ஒன்றுகூடலும் நத்தார் இராப்போசன விருந்தும் எதிர்வரும் 30 ம் திகதி மார்கழி 2018ம் திகதி J&J Swagat Convention Centre, 415 Hood Road, Markham. மண்டபத்தில் 6 மணிக்கு நடைபெற உள்ளது. சுருவில் வாழ் அன்பர்கள், நண்பர்கள் அனைவரையும் தவறாது வருகை தந்து சிறப்பிக்குமாறு அன்புடன் அழைக்கப்படுகின்றார்கள்.

நிர்வாகசபை

தொடர்பு கொள்ளவேண்டிய தொலைபேசி இலக்கம்:

தி. பிரபாகரன்
தலைவர்
647-622-6679

உமா ரூபன்
செயலாளர்
416-617-4671

# சர்வதிகாரத்தைத் தடுத்து நிறுத்திய பெருமை சம்பந்தனையே சேரும்

## மட்டக்களப்பு கூட்டத்தில் சுமந்திரன் புகழாரம்



இந்த நாட்டில் சர்வாதிகாரத்திற்கு வித்திடுகின்ற- சர்வாதிகாரத்திற்கு நாடைக்கொண்டு செல்கின்ற- முயற்சியைத் தடுத்துநிறுத்திய பெருமை தமிழ்த் தேசியகூட்டமைப்பின் தலைவரான சம்பந்தன் ஐயாவையே சாரும் எனத் தமிழரசுக் கட்சியின் ஊடகப் பேச்சாளரும் யாழ் மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினருமான எம்.ஏ.சுமந்திரன் தெரிவித்தார்.

இந்த நாட்டில் ஜனநாயகம் வீழ்ச்சியடையும்போது முதலாவது பாதிக்கப்படுவது தமிழ் மக்களாகவே இருப்பார்கள் எனவும் அவர் சுட்டிக்காட்டினார். நாங்கள் பல தடவைகளில் "பிச்சை வேண்டாம். நாயைப்பிடி" என்ற நிலையில் செயற்பட வேண்டிய சூழ்நிலையில் இருக்கின்றோம். கடி நாயைக்கட்டி வைக்க வேண்டிய தேவையிருக்கின்றது. அதனையே நாங்கள் செய்துள்ளோம்.

நாங்கள் பேரம் பேசிக் கொண்டிருக்கின்றபோது பேரம் பேசியவர்களைத் துரத்திவிட்டு கடி நாயை ஏவிவிட்டபோது அந்தக் கடி நாயைக் கட்டிப்போட வேண்டிய தேவை எங்களுக்கு இருந்தது. அதனையே நாங்கள் செய்தோம் எனவும் சுமந்திரன் தெரிவித்தார்.

தென்னலங்கையில் உள்ள மக்கள் மத்தியில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் மீதான மதிப்பு இன்று வானுயர வளர்ந்திருக்கின்றது. இது (புதிய) அரசமைப்புத் தொடர்பில் அவர்களுடன் உரையாடும்போது, அவர்களிடம் அதனைக் கொண்டு செல்கின்ற போது,எங்கள் மீதுள்ள அந்த மதிப்பு புதிய அரசப்பை அவர்களை ஏற்றுக் கொள்ளச் செய்யும்என்றார் அவர்.

மட்டக்களப்பில் நத்தார் ஆராதனையின் போது சுட்டுக் கொல்லப்பட்ட மட்டக்களப்பு மாவட்ட முன்னாள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு நாடாளுமன்ற உறுப்பினர் மாமனிதர் ஜோசப் பரராஜசிங்கத்தின் 13ஆவது நினைவுதினம் நேற்றுப் பிற்பகல் அனுஷ்டிக்கப்பட்டது.

இலங்கைத் தமிழரசுக் கட்சியின் ஏற்பாட்டில் மட்டக்களப்பு அமெரிக்க மிசன் மண்டபத்தில் இந்த நிகழ்வு நடைபெற்றது. இலங்கைத் தமிழரசுக்கட்சியின் பொதுச்செயலாளரும் முன்னாள் கிழக்கு மாகாண விவசாய அமைச்சருமான கி.துரைராஜசிங்கம் தலைமையில் நடைபெற்ற இந்த நிகழ்வில் இலங்கை தமிழரசுக்கட்சியின் ஊடகப்பேச்சாளரும் யாழ் மாவட்ட நாடாளுமன்ற உறுப் பினருமான சுமந்திரன் பிரதம அதிதியாக கலந்துகொண்டார். அங்கு உரையாற்றிய போதே அவர் இதனைத் தெரிவித்தார்.

இங்கு தொடர்ந்து உரையாற்றிய அவர் மேலும் கூறியவை வருமாறு,

"18 ஆவது திருத்தம் ஜே.ஆர். ஜயவர்த்தனவினால் கொண்டுவரப்பட்ட சகல அதிகாரங்களும் மிக்க நிறைவேற்று அதிகாரம்கொண்ட ஜனாதிபதி முறைமைக்கு மேலும் அதிகாரம் வேண்டும் என்று 18வது திருத்த சட்டத்தின் மூலம் அதனை நிறைவேற்றினர். அன்று அதற்குத் தமிழ்த் தேசிய கூட்டமைப்பின் எம்.பியான பியசேன என்பவரும் விலைபோயிருந்தார்.

இந்த நாட்டில் சர்வாதிகார ஆட்சியயான்றை ஏற்படுத்தி குடியரசு ஆட்சியை முடியரசாக மாற்றும் செயற்பாடுகளில் மஹிந்த ராஜபக்ஷ வெற்றியடைந்து வந்த காலப்பகுதியிலேயே இதனை அனுமதிக்க முடியாது, ஜனநாயகம் பாதுகாக்கப்பட வேண்டும் என்ப தற்காக தென்னிலங்கை யில் முற்போக்கு சக்திகள் எழுந்து வந்தன. அந்தப் பயணத்தில் தமிழ் தேசிய கூட்டமைப்பும் சேர்ந்து கொண்டது.

அந்தக் காலப்பகுதியிலேயே ஜனாதிபதித் தேர்தல் ஒன்று அறிவிக்கப்பட்ட நிலையில் ஒரு பொதுவேட்பாளரை நிறுத்தும் வகையில் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியிலேயே ஒருவரைப் பிரித் தெடுத்து அந்த கட்சியின் வாக்குகளையும் பிரிக்கச்செய்து மஹிந்த ராஜபக்ஷவைத் தோற்கடிக்க வேண்டும் என்ற ஒரே நோக்குடன் பல விடயங்களை இணைந்துசெய்தோம்.

பொதுவேட்பாளராக ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சியின் பொதுச் செயலாளராக இருந்த மைத்திரிபால சிறிசேன பிரிந்துவந்து முதல் பொதுக்கூட்டத்தில் மூன்று வாக்குறுதிகளை வழங்கினார். ஜனாதிபதியானவுடன் நிறைவேற்று ஜனாதிபதி முறையை ஒழிப்பேன். நாடாளுமன்றத் தேர்தல் முறையை மாற்றி தொகுதிக்குப் பொறுப்புக் கூறுகின்ற உறுப்பினர்களை உருவாக்கும் நிலையை உருவாக்குவேன். ரணில் விக்ரமசிங்கவைப் பிரதமராக நியமிப்பேன் என மூன்று வாக்குறுதிகளை வழங்கினார்.

தமிழ் மக்கள் இராணுவத் தளபதியாக இருந்த சரத்பொன்சேகவுக்கு வாக்களித்தனர். அதே போன்று ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுக்கு வாக்களித்தனர். அவர்கள் இருவர் மீதும் இருந்த அன்பினால் வாக்களிக்கவில்லை. மஹிந்த ராஜபக்ஷவை வெளியேற்ற வேண்டும் என்பதற்காகவே வாக்களித்தனர் என நான் ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுடன் தெரிவித்திருந்தேன்.

எவரை வெளியேற்றவேண்டும் என்பதற்காகத் தமிழ் மக்கள் உங்களுக்கு வாக்களித்தார்களோ அவரை மீண்டும்பதவியில் கொண்டுவந்து அமர்த்தியதை தமிழ் மக்கள் ஒருபோதும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்று ஜனாதிபதியிடம் நாங்கள் தெரிவித்திருந்தோம்.

ஜனாதிபதி முறையினை ஒழித்தல்,புதிய தேர்தல்முறைமை,தமிழ் மக்களுக்கான அதிகாரப் பரவலாக்கல் போன்றவற்றைக் கொண்டதாக புதிய அரசமைப்பு வடிவம் உருவாக்கப்பட்டது.

2016 ஆம் ஆண்டு புதிய அரசமைப்புத் தொடர்பில் நாடாளுமன்றத்தில் ஜனாதிபதி பல்வேறு கருத்துகளை முன்வைத்தார். சு.கவே பல தடைகளை ஏற்படுத்தியது அந்த ஆண்டு பல செயற்பாடுகள் முன்கொண்டு- செல்லப்பட்டு இடைக்கால வரைவு ஒன்றினைச் சமர்ப்பிக்க நடவடிக்கை எடுத்த போது அதற்கு ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சி பல தடைகளை ஏற்படுத்தியது.

ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சியின் பல தடைகள் காரணமாக அது தாமதமாகி 2017ஆம் ஆண்டு செப்டம்பர் 23ஆம் திகதி வெளிவந்தது. நீண்ட இடைவெளிக்கு பின்னர் வெளிவந்தது. அந்த நாட்களில் ஜனாதிபதியை சந்தித்து பேசினோம். ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சியின் தடைகள் தொடர்பில் பல தடவைகள் ஜனாதிபதிக்கு எடுத்துக்கூறினோம். ஆனால் அவ்வாறு இருக்காது, அதனை எப்படியும் நிறைவேற்றியே தீருவேன் என்றெல்லாம் வாக்குறுதிகளை வழங்கினார்.

பல்வேறு தடைகளுக்கு மத்தியில் இந்த நவம்பர் 07ஆம் திகதி நிபுணர்கள் வரைந்த ஒரு முழு அரசமைப்பு வெளிவரவிருந்தது. அதற்கு சில நாள்களுக்கு முன்னர்தான் இந்த நாட்டில் அரசியல் மாற்றங்கள் நடைபெற்றன. ஸ்ரீலங்கா சுதந்திரக்கட்சி, ஐக்கிய மக்கள் சுதந்திரக் கூட்டமைப்பைச் சேர்ந்தவர்கள் அந்த அரசப்பு உருவாக்க முயற்சிகளைத் தடுப்பதற் காகவே இந்த மாற் றத்தை செய்ததாகத் தெரிவித்திருந்தனர்.

குறித்த அரசமைப்பு வந்தால் நாடு பிளவுபடும் எனவும் பலர் கூறியுள்ளனர். இந்த அரசியல் மாற்றத்திற்காக இந்த விடயமும் ஒரு காரணியாக இருந்துள்ளது என்பதை நாங்கள் மறந்துவிடக் கூடாது.

19ஆவது திருத்தம் கொண்டுவரப்படுவதற்கு முன்னர் ஜனாதிபதிக்குக் கொடுக்கப்பட்டிருந்த பிரதமரை நீக்கும் அதிகாரம் 19ஆவது திருத்தம் கொண்டு வரப்பட்டதன் மூலம் அகற்றப்பட்டுள்ளது. அந்த அதிகாரம் ஜனாதிபதியிடம் இல்லை.தேர்தல் முடிந்த பின்னரே ஒரு பிரதமரை நியமிக்கின்ற அதிகாரம் ஜனாதிபதிக்கு கொடுக்கப்பட்டுள்ளது. பெரும்பான்மையுள்ளவரையே அவ்வாறு நியமிக்கமுடியம்.

இதனடிப்படையிலேயே பெரும் பான்மையை நிஷரூபிப்பதற்கு இலஞ்சம் அடிப்படையில் நாடாளுமன்ற உறுப்பினர்களைத் தங்களது பக்கத்திற்கு ஈர்த்து அதன் மூலம் தனக்கு இல்லாத பெரும்பான்மையினை உருவாக்குகின்ற செயற்பாடுகள் நடைபெற்றன.

அமைச்சு பதவி என்கின்ற இலஞ்சமும் கொடுக்கப்பட்டது என்பது அனைவருக்கும் தெரிந்த விடயம். அந்த இலஞ்சத்திற்கு துரதிர்ஷ்டவசமாக வியாழேந்திரனும் துணைபோனார். இலஞ்சம் கொடுத்து ஒரு பெரும்பான்மையினை உருவாக்கும் செயற்பாடுகள் முன்னெடுக்கப்பட்டன. ஜனாதிபதியே அதனை பின்னர் தெரிவித்திருந்தார்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு உறுப்பினர்களிடம் பேரம் பேச வந்த போது அவர்களிடம் பேரம. பேசமுடியாத நிலையிருந்த போதிலும் ஒருவர் சென்றார். அவ்வாறான நிலையில் பெரும்பான்மையினை விலை கொடுத்து வாங்கும் முயற்சியும் நிறைவேறவில்லை. அவ்வாறு கிடைக்காத காரணத்தினால்தான் நாடாளுமன்ற அமர்வு தடுக்கப்பட்டது, நாடாளுமன்றம் கலைக்கப்பட்டது.

அதிலும் ஜனாதிபதி தமக்கு இல்லாத அதிகாரத்தினை கொண்டு நாடாளுமன்றத்தினைக் கலைத்தார். 19ஆவது திருத்ததிற்கு முன்னர் ஒருவருடத்தில் கலைக்க முடியும். ஆனால் 19வது திருத்தம் வந்ததன் பின்னர் நான்கரை வருடமாக அது அதிகரிக்கப்பட்டுள்ளது.

அரசியல் பிரச்சினைகள் ஏற்பட்ட காலத்தில் ஜனாதிபதியை பல தடவைகள் சந்தித்து கலந்துரையாடிய நிலையில் எந்தவித தீர்வும் எட்டப்படாத நிலையில், ஜனாதிபதியின் செயற்பாட்டுக்கு எதிராக நீதிமன்றம் சென்றோம்.

இந்த நாட்டில் சர்வாதிகரத்திற்கு வித்திடுகின்ற - சர்வாதிகாரத்திற்கு நாட்டினை கொண்டு செல்கின்ற - முயற்சியைத் தடுத்து நிறுத்திய பெருமை தமிழ்த் தேசிய கூட்டமைப்பின் தலைமையான சம்பந்தன் ஐயாவையே சாரும்.

நீதிமன்றில் எங்களுக்கு நிவாரணம் கிடைக்காது என பலர் சிந்தித்திருந்தனர். நீதிபதிகள் சுயமாக செயற்பட மாட்டார்கள், துணிவாக செயற்பட மாட்டார்கள் என்ற சந்தேகம் பலருக்கு இருந்தது. ஆனாலும் சுயாதீன ஆணைக்குழு இயங்கிய காரணத்தினாலும் நீதிமன்றங்கள் சுயாதீனமாக செயற்பட தொடங்கியதன்காரணமாகவும் உயர்நீதிமன்ற நீதியரசர்கள் துணிவாகத் தீர்ப்பளித்தனர்.

ஆனால் கூடுதலாக நீதியரசர்களை மஹிந்த ராஜபக்ஷ கோரியிருந்தனர். தங்களது ஆட்சிக்காலத்தில் நியமிக்கப்பட்ட நீதியரசர்களும் சென்றால் ஏதாவது மாற்றத்தினை செய்யலாம் என்று எண்ணி ஏழு நீதியரசர்கள் நியமிக்கப்பட்டனர். ஆனாலும் ஜனாதிபதியின் செயற்பாடு சட்ட வலு அற்றது என்ற தீர்ப்பினை அவர்கள் வழங்கியிருந்தனர்.

இந்தச் சட்ட நடவடிக்கையினை நாங்கள் மேற்கொண்டபோது பல இடங்களில் தமிழ் தேசிய கூட்டமைப்பினை பலர் கேள்விக்குட்படுத்தினர்.

ரணிலுக்காகத் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு நீதிமன்றம் சென்றதாகக் கூறினார்கள். ரணிலுக்காகப் போகவில்லை. ரணில் விக்ரமசிங்க கூட இந்தச் செயற்பாட்டினை செய்திருந்தாலும் நாங்கள் அவருக்கு எதிராகவும் நீதிமன்றம் சென்றிருப்போம்.

நாட்டில் ஜனநாயகக் குறைவு ஏற்படுகின்றபோது - ஜனநாயகத்திற்கு அச்சுறுத்தல் வருகின்றபோது - அதனைத் தடுத்துநிறுத்த வேண்டிய பாரிய பொறுப்பு எங்கள் அனைவருக்கும் உள்ளது. இந்த நாட்டில் ஜனநாயகம் வீழ்ச்சியடையும்போது முதலாவது பாதிக்கப்படுவது தமிழ் மக்களாகவே இருப்பார்கள். இந்த நாட்டிலேயே நாங்கள் வாழ்கின்றோம். இந்த நாட்டுக்குள்ளேயே எங்களுக்கு அரசியல் தீர்வுவேண்டும் என்று கேட்கின்றோம். நாங்கள் இப்போது தனிநாடு கேட்கவில்லை.

ஒருநாட்டுக்குள் எங்களை நாங்கள் ஆளக்கூடிய முற்றுமுழுதான தீர்வினையே நாங்கள் கோருகின்றோம். அதற்கு சர்வதேசத்தின் முற்று முழுதான ஆதரவு இருக்கின்றது. தென்னிலங்கையில் முற்போக்குச் சக்திகள் தமிழ்த் தேசியக்கூட்டமைப்பு தன்னுடைய கடமையினைச் செய்ததாகக் கூறுகின்றனர்.

30ஆம் பக்கம் பார்க்க

### சர்வதிகாரத்தைத் தடுத்து நிறுத்திய பெருமை சம்பந்தனையே சேரும்

இந்த நாட்டினைப் பாதுகாத்த பெருமை தமிழ் தேசிய கூட்டமைப்புக்கு உள்ளது என இன்று பலர் கூறுகின்றனர். இரண்டாவது தடவையாகவும் இந்த நாட்டின் ஆட்சி மஹிந்த ராஜபக்ஷவின் கைகளுக்குள் சிக்குமாக இருந்தால் அதனை நாங்கள் ஒருபோதும் திரும்ப பெற்றுக் கொள்ள முடியாது. அதனால் அதனை ஆரம்பத்திலேயே கிள்ளியயறிய வேண்டிய ஒரு தேவையிருந்தது.

நாங்கள் பல தடவைகளில் "பிச்சைவேண்டாம் நாயைப்பிடி" என்ற நிலையில் செயற்படவேண்டிய சூழ்நிலையில் இருக்கின்றோம். கடிநாயை கட்டிவைக்கவேண்டிய தேவையிருக்கின்றது. அதனையே நாங்கள் செய்துள்ளோம். நாங்கள் பேரம்பேசிக்கொண்டிருக்கின்றபோது பேரம்பேசியவர்களை துரத்தி விட்டு கடிநாயை ஏவிவிட்டபோது அந்தக் கடிநாயை கட்டிப்போடவேண்டிய தேவை எங்களுக்குள்ளது. அதனையே நாங்கள் செய்தோம்.

நாங்கள் இன்றும் நிதானமாக நடந்து கொள்வதற்கு தேவையிருக்கின்றது. இந்த அரசியல் சூழ்ச்சி இன்னும் இருக்கின்றது. அது எப்பவும் செயற்படமுடியும். அது ஜனாதிபதியின் நடத்தைகளிலேயே தெரிகின்றது. எதிர்க்கட்சி தலைவர் பதவியை கைப்பற்ற வேண்டும் என மஹிந்த ராஜபக்ஷ அலைவதில் தெரிகின்றது. இது கடந்துபோன விடயம் என்று நாங்கள் இருக்க முடியாது. மிகவும் அவதானமாக சிந்தித்து நடக்க வேண்டிய காலம் இன்னும் இருக்கின்றது. தென்னலங்கையில் உள்ள மக்கள் மத்தியில் தமிழ்த் தேசியகூட்டமைப்பின் மீதான மதிப்பு வானுயர வளர்ந்திருக்கின்றது."

ஸ்ரீலங்கா செய்திகள்

# நினைத்தால் ஒரு வருடத்தில் ஆட்சியைக் கைப்பற்றுவோம்

## மஹிந்த ராஜபக்ஷ சூழுரைக்கிறார்

ஒரு வருடத்திற்குள் நாம் நினைத்தால் ஆட்சியைக் கைப்பற்ற முடியும் என்று நாடாளுமன்ற உறுப்பினர் மஹிந்த ராஜபக்ஷ தெரிவித்துள்ளார். மொறட்டுவைப் பிரதேசத்தில் நேற்று முன்தினம் இடம்பெற்ற நிகழ்வொன்றில் கலந்து கொண்ட பின்னர் ஊடகங்களுக்குக் கருத்துத் தெரிவிக்கும் போதே அவர் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

"நல்லாட்சி என்று கூறிக்கொண்டு நாட்டினது பொருளாதாரத்தைப் படுகுழிக்குள் தள்ளிய இந்த அரசாங்கத்தினால் மக்கள் பாரிய இன்னல்களுக்கு முகம் கொடுத்து வருகின்றனர். இதனை



மாற்றியமைக்கவே நாம் ஆட்சியைக் கைப்பற்றினோம். குறுகிய காலத்திற்குள் எம்மால் நாட்டை அபிவிருத்தியின் பாதையில் கொண்டு செல்ல முடியும்.

இதனை நாம் எமது ஆட்சியில் நிஷரூபித்திருந்தோம். ஆனால் இன்று மக்கள் பல்வேறு சிக்கல்களுடன் வாழ்ந்து வருகின்றனர். ஒருவேளை உணவை மட்டும் உட்கொள்ளும் அளவிற்கு நாட்டு மக்கள் துன்பங்களை அனுபவித்து வருகின்றனர்.

தற்போதைய ஆட்சியாளர்களுக்கு அதிகாரத்திலும் பதவியிலுமே ஆசை இருக்கின்றது. ஆனால் நாட்டிலும் நாட்டினது அபிவிருத்தியிலும் எந்தவிதமான அக்கறையும் இவர்களுக்கு இல்லை. நாம் நினைத்தால் ஒரு வருடம் கடப்பதற்குள் தற்போதைய அரசாங்கத்தை மாற்றியமைக்க முடியும்" என அவர் மேலும் குறிப்பிட்டார்.

### சந்திரிகாவுக்கு அழைப்பு இல்லை; மஹிந்த ராஜபக்ச வரவேயில்லை

சிறிலங்கா சுதந்திரக் கட்சியின் அமைப்பாளர்களுக்காக நேற்று முன்தினம் நடந்த கூட் டத்துக்கு கட்சியின் காப்பாளர்களில் ஒருவரும், முன்னாள் அதிபருமான சந்திரிகா குமாரதுங்கவுக்கு அழைப்பு அனுப்பப்படவில்லை.

அன்றைய கூட்டத்தில் சந்திரிகா குமாரதுங்க பங்கேற்கவில்லை. இது குறித்து கூட்டத்துக்குப் பின்னர், சுதந்திரக் கட்சியின் பொதுச்செயலர் பியதாஸவிடம், செய்தியாளர்கள் கேள்வி எழுப்பினர்.

அதற்கு அவர், சந்திரிகா குமாரதுங்கவுக்கு அழைப்பு விடுக்கவில்லை. ஏனென்றால் அவர் கடந்த சில மாதங்களாக எந்தக் கூட்டங்களிலும் பங்கேற்கவில்லை என்று தெரிவித்துள்ளார்.

அதேவேளை, இந்தக் கூட்டத்தில் கட்சியின் மற்றொரு காப்பாளரான முன்னாள் பிரதமர் டி.எம். ஜயரட்ண பங்கேற்றிருந்தார். எனினும், சுதந்திரக் கட்சியின் மற்றொரு காப்பா ளரான மஹிந்த ராஜபக்ஷ இந்தக் கூட்டத்துக்கு வரவில்லை.

தான் சுதந்திரக் கட்சியின் ஆயுள் காலஉறுப்பினர் என்றும், கட்சியின் காப்பாளராக இருக்கிறேன் என்றும்,அவர் சிங்கள வாரஇதழ் ஒன்றுக்கு செவ்வியளித்திருந்த போதும், கட்சி அமைப்பாளர்கள் கூட்டத்தில் பங்கேற்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.



இது பதவிக்கு வரும் இருபெரும் கட்சிகளுக்கும் பொருந்தும்.

அதேபோல அண்டைநாடான இந்தியாவை 1987 இலங்கை - இந்திய ஒப்பந்தத்தின் வாயிலாக ஏமாற்றி சிக்கவைத்து இறுதியில் இலங்கைக்குச் சாவாலாக இருந்த இந்தியாவை தோற்கடித்து இலங்கையைவிட்டு இந்தியாவை வெளியேற்றினார்கள். 1987ஆம் ஆண்டு ஒப்பந்தத்தில் உள்ள முக்கிய விடயமே அமைக்கப்பட்ட வடக்கு-கிழக்கு மாகாணசபைகளை இணைத்தல் பற்றிய விடயமாகும். அதில் தற்காலிக இணைப்பு என்ற ஓர் ஆப்பை சொருகி இந்தியாவை திருப்திபடுத்திவிட்டு இந்தியா பல வீனம் அடைந்த நிலையில் தற்காலிக இணைப்பு என்ற அந்த ஆப்பை வெறும் நீதிமன்ற தீர்ப்பின் மூலம் அகற்றிவிட்டார்கள். இரு நாட்டு ஒப்பந்தமும், ஓர் அரசியல் தீர்வும் வெறும்

செயற்பட்டு தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் உதவியுடன் ரணிலை மீண்டும் பதவியில் அமர்த்துவதில் வெற்றி பெற்றுள்ளது. இது அமெரிக்காவின் வெற்றி என்று சொல்வதில் சந்தேக மில்லை.

எம்முன் உள்ள இப்போதைய முக்கிய கேள்வி இதுதான். அதாவது ரணிலின் விடயத்தில் உடுக்கை இழந்தான் கைபோல அவரைப் பாதுகாத்த அமெரிக்கா தமிழர்களுக்கான நீதி பற்றிய விடயத்தில், அவர்களின் பிறப்புரிமையான உரிமை பற்றிய விடயத்தில், கேட்பாறின்றி, பார்ப்பாறின்றி இனப்படுகொலைக்கு உள்ளான ஈழத் தமிழர்களின் வாக்குக்களினால் ரணிலுக்கு ஏற்பட்ட பதவிப் பறிப்பில் இருந்து அவரைக் காப்பாற்றியது போல இப்போது தமிழ் மக்களின் நீதிக்காகவும், உரிமைக்காகவும் அமெரிக்காவும் கூடவே இந்தியாவும் செயற்பட

மு.திருநாவுக்கரசு

# அரசியல் தீர்விற்கான பொறுப்பு அமெரிக்கா தலைமையிலான மேற்குலகின் கையில் தங்கியுள்ளது

அமெரிக்கா தலைமையிலான மேற்குலகம், அண்டை நாடான இந்தியா, தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு ஆகிய மூன்றும் இணைந்து ரணில் விக்ரமசிங்கவை பிரதமர் பதவியில் அமர்த்தி அவரது தலைமையில் அரசாங்கத்தை அமைத்துள்ளன.

மின்னாமல், முழங்காமல் திடீரென பிரதமர் ரணில் விக்ரமசிங்கவை ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன பதவியில் இருந்து அகற்றி மகிந்த ராஜபக்ஷவை பிரதமராக்கினார். ஆனால் நாடாளுமன்றத்தில் இதனை வலுவாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு எதிர்த்தது. இந்நிலையில் வேறுவழியின்றி ஜனாதிபதி நாடாளுமன்றத்தைக் கலைத்தார். அதாவது ஜனாதிபதியினதும், மகிந்த ராஜபக்ஷவினதும் திட்டத்தை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு தோற்கடித்தது. இந்நிலையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பைத் தாண்டி அரசியல் செய்வதற்கான அடுத்த வழி நாடாளுமன்றத்தைக் கலைப்பதாக அமைந்ததால் அவர்கள் நாடாளுமன்றத்தைக் கலைத்தார்கள்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை மீறுவது சிங்களத் தலைவர்களுக்கு ஒரு கடினமான காரியமல்ல. ஒருபுறம் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் ஆதரவு ரணிலுக்கு இருந்ததற்குப் பின்னால் மேற்குலகினதும், இந்தியாவினதும் கரங்கள் உண்டு என்று சிறிசேன - மகிந்த அணியினர் நம்பிய போதிலும் வெளிப்படையாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்பே களத்தில் நின்றதால் மேற்குலகையும், இந்தியாவையும் மீறி தமிழ்த் தேசியக் கூட்டமைப்பைத் தாண்டுவதற்காக நாடாளுமன்றத்தைக் கலைத்தார்கள்.

இதன்பின்பு அமெரிக்காவும், மேற்குலகமும், மேற்குலக நிறுவனங்களும் தெளிவான இராஜதந்திர அழுத்தங்களை ஏற்படுத்தின. இத்தகைய அழுத்தங்களின் பின்னணியில் நீதித்துறையின் பேரால் அதற்குப் பணிய வேண்டிய அவசியம் சிறிசேன-மகிந்த அணிக்கு உருவாகியது. அதாவது நீதித்துறையைத் தாண்டுவதுகூட ஆட்சியாளர்களுக்கு கஷ்டமில்லை. ஆனால் நீதித்துறையை நெருக்கடிக்கு உள்ளாக்க சர்வதேச சக்திகளாலும், உள்ளூர் சிங்கள உயர் குழாத்தாலும் முடிந்தது. எப்படியோ தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தெளிவான ஆதரவால் ரணில் விக்ரமசிங்கவிற்கு ஆதரவாக நாடாளுமன்றத்தில் இருதடவைகள் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட தமிழ்த் தேசியக் கூட்டமைப்பே காரணமாகும்.

இப்பின்னணியில் நீதித்துறையும் தவிர்க்க முடியாதவாறு அரசியல் யாப்பு விதிகளுக்கு அமைய தீர்ப்பு அளிக்க வேண்டியிருந்தது.

இங்கு தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கு பின்னணியாக ஒருபுறமும், இராஜதந்திர அழுத்தங்களை இன்னொருபுறமும் அமெரிக்கா தலைமையிலான மேற்குலகம் மிகக் கெட்டியாக பிரயோகித்தது. இது வெற்றிபெற்றதில் இந்தியாவின் மகிழ்ச்சி அதன் வெளியுறவுச் செயலக அறிக்கையின் வாயிலாக வெளிப்பட்டது.

குத்துச் சண்டை வீரன் களத்தில் இறங்கியதும் தன் எதிரிக்கு அச்சமூட்டுவதற்கு ஏற்ற வகையில் தன் முஷ்டியைப் பிடித்து ஜகான்ஸ் அடிப்பான். இங்கு ரணிலைப் பதவி நீக்கம் செய்து மகிந்தவை பிரதமராக்குவதற்கு ஏற்ற வகையில் இந்தியாவை நோக்கி சிறிசேன ஒரு பெரும் ஜகானை அடித்தார். தன்னை கொல்வதற்கான சதியில் இந்திய உளவுத்துறை ஈடுபட்டிருக்கின்றது என்பதே அந்த ஜகானாகும். இந்தியா வெளிப்படையான அர்த்தத்தில் களத்தைவிட்டு ஒதுங்குவது தவிர்க்கமுடியாதாய் அமைந்தது.

இப்பின்னணியில் பொறுப்புக்கள் அனைத்தையும் அமெரிக்கா தலைமையிலான மேற்குலகம் வகிக்கத் தொடங்கியது. சிலம்பம் ஆட முடியாதோ அப்படியே தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின்றி அமெரிக்காவால் ரணிலை பதவிக்குக் கொண்டுவரும் பணியை நிறைவேற்றியிருக்க முடியாது. அப்படிப் பார்த்தால் இதில் முக்கிய கதாநாயகர்களாக அமெரிக்காவும், தமிழ்த் தேசியக் கூட்டமைப்பும் உண்டு.

தமிழ்த் தலைவர்களை ஏமாற்றும் வித்தையில் எப்பொழுதும் சிங்களத் தலைவர்கள் வெற்றி பெற்றார்கள்.

தொழில்நுட்பக் காரணத்தின் பேரால் நீதிமன்றத் தீர்ப்பின் வாயிலாக அகற்றப்பட்டது. அத்துடன் எந்த ஒப்பந்தத்தின் மூலமான மாகாணசபை தீர்வு என்று முன்வைக்கப்பட்டதோ அந்த மாகாணசபைத் தீர்வையே தமிழ் மக்களின் தாயகம் என்ற இருப்பிற்கு எதிரான ஆயுதமாகப் பயன்படுத்தி கிழக்கு மாகாணத்தை கபளீகரம் செய்துவிட்டார்கள்.

இவ்வாறு இந்தியாவை சிங்கள இராஜதந்திரிகள் தோற்கடித்த கல்முனைக் கூர்கொண்ட வரலாறு நீண்டு செல்கிறது.

அதேபோல அவர்கள் இப்போது அமெரிக்காவையும் தமிழர் விவகாரத்தில் தோற்கடித்துள்ளார்கள். அதாவது அமெரிக்கா கொண்டுவந்த போர்க்குற்ற சர்வதேச கலப்பு விசாரணை என்ற ஐநா தீர்மானத்தை இலங்கை அரசு ஆதரித்தது போல் பாசாங்கு செய்து போர்க்குற்ற விசாரணையில் இருந்து முதல்கண் போர்க்குற்றத்திற்குப் பொறுப்பான தலைவர்களான மகிந்த ராஜபக்ஷ - மைத்திரிபால சிறிசேன - கோத்தபாய ராஜபக்ஷ - சரத் பொன்சேக ஆகிய நால்வரையும் விசாரணையில் இருந்து தவிர்த்தார்கள். பின்பு சிப்பாய் மட்ட விசாரணை என்ற நிலைக்கு அது உள்ளானது. இறுதியில் இதுவரை அதுவும் இல்லை. எப்படியோ ஐநா தீர்மானத்தில் சொல்லப்பட்டவாறு போர்க்குற்ற விசாரணை அரசியல் தீர்வு என்ற அமெரிக்க நிலைப்பாட்டை சிங்கள ஆட்சியாளர்கள் அணைத்து எடுத்து வெளியே தள்ளிவிட்டார்கள். இது அமெரிக்காவை ஏமாற்றிய உச்சக்கட்ட இராஜதந்திரமாகும்.

இந்நிலையில் ரணிலின் பிரதமர் பதவி பறிபோனபோது உடுக்கை இழந்தான் கைபோல அமெரிக்கா

முடியும் என்பதை நடந்து முடிந்த நடைமுறை நிரூபித்து இருக்கிறது.

சிங்கள அரசியல் தலைவர்களை ஒருபோதும் நம்பவும் முடியாது, அவர்கள் தீர்வு வழங்கப் போவது மில்லை.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு இலங்கை அரசியல் யாப்பு: டொனமூர் முதல் சிறிசேன வரை என்ற தலைப்பில் இக்கட்டுரை ஆசிரியர் எழுதிய நூலில் அரசியல் தீர்வு என்பது ஒரு கானல் நீர் என்றும், போர்க்குற்ற விசாரணையில் இருந்து தப்புவதற்கான ஒரு ஏமாற்று நாடகமாக புதிய அரசியல் யாப்பு உருவாக்கம் முன்னெடுக்கப்படுவதாகவும் எழுதப்பட்டுள்ளமை கடந்த மூன்றரை ஆண்டு கால நடைமுறையின் மூலம் நிதர்சனமாகியுள்ளது.

சிங்கள அரசியல் அகராதியில் யுத்தமே சமாதானம், அடிமைத்தனமே சுதந்திரம், அறியாமையே பலம் என்ற ஜார்ஜ் ஓவலின் கூற்றே நடைமுறையாக உள்ளது.

இந்நிலையில் சமாதானத்தை ஏற்படுத்த வேண்டிய பொறுப்பு நேரடி அர்த்தத்தில் அமெரிக்காவையும், அண்டைநாடான இந்தியாவையும் சார்ந்துள்ளது என்பதை நடந்து முடிந்த இலங்கை அரசியல் நெருக்கடியை தீர்ப்பதில் அவர்கள் பெற்ற வெற்றியின் மூலம் காணமுடிகிறது. ஆதலால் ஒரு சர்வதேச சமாதான சபையை உருவாக்கி அதன் வாயிலாக அரசியல் தீர்வையும், போர்க்குற்ற விசாரணையையும் முன்னெடுக்க இவ்விரு பெரும் அரசுகளும் கூடவே பிரித்தானியாவும் பணியாற்ற வேண்டும்.

இதைத்தான் நீதியின் பேரால், நடைமுறையின் பேராலும், நடந்து முடிந்த அனுபவத்தின் பேராலும் ஈழத் தமிழர்கள் வேண்டி நிற்கின்றனர்.